Sri Chidananda Shashtiabda Poorthy Commemoration Volume.

# SRI KAMAKALA VILASA

(With Tamil Commentary)



**N. SUBRAMANIA IYER.**

ஸ்ரீ குஹாநந்த மண்டலி வெளியீடு -11

॥ श्रीः ॥

॥ ब्रह्मविदाप्नोति परम् ॥

॥ ஸ்ரீ꞉ ॥

॥ ப்³ரஹ்மவிதா³ப்னோதி பரம் ॥

# ॥ श्रीकामकलाविलासः ॥

## ஸ்ரீ காமகலா விலாஸம்

(மூலமும்)

ஸ்ரீ குஹாநந்த மண்டலியின் ஸ்தாபகர்

**பிரஹ்மஸ்ரீ, அருட்கவி, ந. சுப்ரமணிய அய்யர்**

அவர்களாலியற்றப்பட்ட

**ஆநந்தோல்லாஸம்**

என்னும் தமிழ் விருத்தியுரையும்.

**ஸ்ரீ குஹாநந்த மண்டலீ**

சென்னை.

 **1942** [ரூ. 1-8-0

# FOREWORD.

**KAMAKALA VILASA** of Punyananda is a handbook of the philosophy of the Srividya cult popularly called the Mantra Sastra. What Muktāvali is to the modern school of Naiyayikas, what the Vedanta Paribhasha is to the Advaitic school of philosophy and what the Sankhya Karika is to the Sankhya Darśana, Kāmakala Vilasa is to the literature of Mantra Sastra. It may be termed as the Prakarana Grantha of the science of Srividya.

The literature of Srividya abounds both in books dealing with its ritual and its philosophy. The law of the ritual can be traced to *Parasurama Kalpa Sutra* which is its original source. *Vamake'svara Tantra*, also known as *Nityashodasikārnava*, another ancient authority, deals with both - with the ritual in the first five Viśramas roughly running to 400 slokas and with the philosophy in the next three Viśrāmas running to about 400 slokas constituting what is popularly known as *Yogini Hridaya*. *Tantrarāja*, an equally ancient treatise, devotes its first 34 chapters largely to the ritual and the last two chapters exclusively to Vasana and allied topics of philosophy.

Of the two aspects *viz*., the ritualistic and the philosophical in the light of which Srividya can be viewed, it is the philosophical that is exclusively dealt with in *Kamakalāvilāsa*. It proceeds on the lines chalked out by the *Pratyabhijñā Satras* of the Kashmirian school which serve as the common source of the Saiva and Sakta cults. The Saiva aspect was worked upon and elaborated in *Siva Drishti* and other works which followed upon its heels including the *Pratyabhijñā Vimarsini* of the great Alamkārika, Abhinavagupta. The Sakta aspect was emphasised and developed in the Chidgagana Chandrikā of Kālidāsa and similar works of later date including the Tantraloka of Abhinavagupta.

To this latter school of. Sakta which emerged from the Pratyabhijñā Sūtras belongs this short and sweet handbook known as Kāmkalā Vilāsa. This book presents in a short compass the whole range of the philosophy of Srividya. Among others. it deals with topics like the creation of the Universe in its twofold division of Speech **(वाक्)** (**வாக்**)and Object **(अर्थ)** (**அர்த²**) which emerged from the primitive wish to create, which dawned at the outset of creation on the Supreme Being. The development of Sri Chakra from the Bindu is symbolical of the evolution of the Universe from the primordial seed which manifested itself both as Sukla Bindu and Rakta Bindu which, when coming into mutual contact, is described in Srividya literature as *Kamakalā*, the root - cause of all creation. A glance at the contents prefixed to this work will give a succinct view of the several topics dealt with in the book. The learned commentator has given a tentative date to the author of the text by placing him in the middle of the 14th century.

This book has had two editions in Sanskrit printed along with the commentary *Chidvalli* of Naṭanānanda. One is the Madras edition brought out by the late Mr. M. V. Srinivasa Iyer, the other is the North - Indian edition brought out by Arthur Avalon. But an elucidation of the tenets embodied in this work for people knowing Tamil, but not quite conversant with Sanskrit, has always remained a long - felt want.

Not only is this long - felt want satisfied by the present publication, but also, be it noted, the learned author of the Tamil commentary printed herein, Brahmasri Nadiminti Subrahmanya Iyer has struck an entirely new and original method by which the synthesis between the Mantra Sastra and the Vedanta has been deftly brought out. One who reads this commentary can hardly

fail to perceive that the bedrock of the science of Srividya is furnished by the philosophy of Vedanta promulgated by Sri Sankara.

Of all the works written by the learned com- mentator, his commentary on this work which he has appropriately styled as *Anandollasa*, the Bloom of joy, may be considered to be his master - piece. It draws largely from an original work of his, previously published under the name and style of Srividya Saparyā Vāsanā in which he has exhaustively dealt with the philosophical background of all the details of ritual involved in the Devi worship. The light in which the ideas are presented in this learned commentary opens out a new and superior avenue for all reasoning Upasakas which, we are sure, will stand the test of times. In short Brahmasri N. Subrahmanya Iyer has laid the world of Upāsakas under a deep debt of gratitude for his unique presentation of Srividya on unexceptionable and rational grounds.

It is my fervent wish tha the ideas presented in this volume may reach a wider public in due course by a rendering in English.

**C. SANKARA RAMA SASTRI**

*Mylapore, Madras*,
22nd October, 1942.

# श्रीरस्तु ।

**ஸ்ரீரஸ்து ।**

## அபிநந்தநம்.

**किं वा सर्वजगद्धिताय जननी पुंरूपिणी रूपिणी**
**किं वा शङ्करभास्करार्यविदुषोरेकावतारो भुवि ।**
**किं वा शिष्यजनस्य पुण्यनिचयः किं भागधेयं नृणां**
**किं वा सद्गुणराशिरेव तनुभृत् किं वा गुरूणां गुरुः ॥**

**கிம் வா ஸர்வஜக³த்³தி⁴தாய ஜனனீ பும்ரூபிணீ ரூபிணீ**
**கிம் வா ஶங்கரபா⁴ஸ்கரார்யவிது³ஷோரேகாவதாரோ பு⁴வி ।**
**கிம் வா ஶிஷ்யஜனஸ்ய புண்யனிசயஃ கிம் பா⁴க³தே⁴யம் ந்ருணாம்**
**கிம் வா ஸத்³கு³ணராஶிரேவ தனுப்⁴ருத் கிம் வா கு³ரூணாம் கு³ருஃ ॥**

“உலக நன்மையைநாடி, ஸர்வ அவயவ ஸுந்தரியான அன்னை அவனியில் புருஷ உருவமெடுத்தனளா? ஸ்ரீசங்கரர் பாஸ்கரர் என்னும் இரண்டு வித்வான்களின் ஒரே அவதாரமா? உபாஸக சிஷ்ய ஜனங்களின் புண்யராசியா? இக்காலத்து மஹா ஜனங்களின் பெரும் பாக்கியமா? நற்குணங்களின் ராசியே உருவெடுத்ததா! இது வரை கிடைத்த நம் குருக்களுக்கெல்லாம் குருவா! இவர்.”

இங்ஙனம் போற்றற்குரிய அரும் பெரும் குணம் படைத்த பிரம்மஸ்ரீ அபிநவ பாஸ்கர, வரகவி, ந. சுப்ரமண்ய ஆர்யர் அவர்கள் ஸ்ரீபாரததேவியின் அருந்தவப் புதல்வராவர். பித்ருயாணம் அல்லது தூமாதி மார்க்கத்திஅள்ள பல்லாயிரம் ரிஷிக ளில் சிலர் அவனியில் அவதரித்து, மங்கும் கலைகளையும் ஸம்ப்ரதாயங்களையும், உத்தரணம் செய்வதாகப் புராணங்கள் கூறுகின்றன. அத்தகைய புண்ய மூர்த்திகளில் இவரும் ஒருவர்.

"மகாபுருஷர்கள் பூங்கொத்துப்போல் எல்லோர் தலை மீதிலுமிருப்பார். அல்லது மரத்தினடியே வீழ்வார்." என்று ஒரு மஹாகவி கூறியவண்ணம், பலர் சிரஸா போற் றிப் புகழத்தக்க கல்வி, ஒழுக்கம், குணம், திறமை முதலியன ஒருமிக்க அமையப் பெற்றவர் இவர். பல ஆண்டு தவமிருந்து ஸத்குருவைப்பெற்று, ஸதுபதேசமெய்தி அதைச் சில ஆண்டு அநுபவித்து, சிஷ்ய மண்டலம் தேடிவர, "சேரவாரும் ஜகத்தீரே" என்னும் தாயுமானவரினுரை போல் தான்பெற்ற பேரின்பத்தை ஊட்டிப் பெருக்கி வருவதை உய்து நோக்கில், ஸ்ரீ வேதவ்யாஸாதிகளைப்போல் தேவர்களால் தூண்டப் பட்ட ஒர் ஆதிகாரிக புருஷரோ என்ற எண்ணம் திடப்படுகின்றது.

ஸ்ரீவித்தையும் பிரும்ம வித்தையும் ஒன்றே என்று தேனிலுமினிய தென்மொ ழியில் தெளிவாக எடுத்துக் காட்டிய ஸத்புருஷர் இவரே. இவருக்குக் கல்வியைவிட அருளே அதிகம். அருளைவிட அநுபவம் அதிகம். அதை விட வாக்குறுதி அதிகம்.

அதைவிட சாந்தி யதிகம். ஆதலின் இவரைப்போற்றிப் புகழும் சொற்களோ, அல்லது இவருக்குச்செய்யும் எத்தகைய உபசாரமோ அதிகமெனின் அதே அதிகப்ரஸங்கமாகும்.

"ஸத்சிஷ்யன் கிடைக்கவேண்டுமென்று குரு ஒர் ஹோமம் செய்யவேண்டும்" என்று தைத்திரீய உபநிஷத்து கூறுகின்றது.

“ஸத்குருவை அடையாச்சீடர் குருட்டாட்டமாடிக் குழியில் விழுவர்” எனகின்றுர் திருமூலர். ஆகலின் உயர் பிறவியளிக்கும் ஸத்குரு கிடைப்பதும், உபதேசித்த வண்ணம் உபதேசத்தை வீணுக்காது பெரும்பயன் பெறும் ஸத் சிஷ்யன் கிடைப்பதும் அரிதினும் அரிதே! இங்கு இருவரது தவப்பயனுலும் ஸத்குருவும் ஸத்சிஷ்ய மண்டலமும் ஒன்று சேர்ந்தது பொன்மலர் நாற்றமுடைதாதல் போன்று போற்றற்கேற்றது.

இம்மஹா புருஷனின் **அறுபதாம் ஆண்டு விழாவில்** ஏனையோரைப்போல் அவருக்குச் சிலைவைப்பது, படமெழுதுவது, பணமுடிப்பளிப்பது, புகழ்மாலை வெளியிடுவது என்னும் இவைகளை விட்டு, இதுகாலை **ஸ்ரீ காமகலா விலாஸம்** என்னும் உயரிய நூலை வெளியிடுவது உபாஸகர்களின் தனிச்சிறப்பைக்காட்டுகின்றது. இம் மண்டலத்தார் அனைவரும் வேதம் கூறிய நூறுண்டுகளுக்குமேல் இருந்து இவ்வுத் தமரின் **ஸஹஸ்ர சந்திர தர்சனமெனும்** சதாபிஷேகத்தை, அன்னையின் பெருமையைக் கூறும் மற்றோர் நூலை வெளியிடும் மூலமாக இன்னும் சிறப்பாகக் கொண்டாட ஜகஜ்ஜனனீ எல்லோருக்கும் ஆயுராரோக்கியத்தையும் அன்யோன்னிய அன்பையும் அளிக்கும்படி அன்னையின் அடிபணிந்து வேண்டுகின்றேம்.

இங்ஙனம்
அன்பர் அடியன்
ஸ்ரீவத்ஸ. **வே. ஸோமதேவசர்மா**

அமரகலாவிலாஸினீ
சாந்தாச்ரமம்
சென்னை.

# ஸ்ரீ காமகலா விலாஸம்.

## முன்னுரை.

**स तु जयतु महात्मा यो बदर्याश्रमस्थः**
**सकलभुवनकर्ध्या प्रेरितः सन्नियत्या ।**
**श्रुतिविहितसुवोधो दत्तवान् मे त्रिवेण्यां**
**गलितनिखिलमोहः श्रीगुहानन्दनाथः ॥**

**ஸ து ஜயது மஹாத்மா யோ ப³த³ர்யாஶ்ரமஸ்த²꞉**
**ஸகலபு⁴வனகர்த்⁴யா ப்ரேரித꞉ ஸந்நியத்யா ।**
**ஶ்ருதிவிஹிதஸுவோதோ⁴ த³த்தவான் மே த்ரிவேண்யாம்**
**க³லிதநிகி²லமோஹ꞉ ஶ்ரீகு³ஹாநந்த³நாத²꞉ ॥**

### நூலின் மஹிமை.

ஶ்ரீகாமகலாவிலாஸமென்னும் இச்சிறந்த நூலானது **ஶ்ரீமத்பரமஹம்ஸ மஹாயோகி புண்ணியாநந்தநாதரால்** இயற்றப்பட்டதாகும். இவர் காஶ்மீரதேசத்தில் மிகப் பிரஸித்திபெற்று விளங்கியதாகத் தெரிகின்றது.

"ஜீவனது அதிஷ்டானவடிவ கூடஸ்த சேதனமும், பிரபஞ்சாதிஷ்டான பிரஹ்ம சேதனமும், ஜகத்காரண பரமேஶ்வர சேதனமும் ஒன்றே" யென்றுணர்த்தும் அகண்டாகாரவ்ருத்தியின் விலாஸமே **காமகலா விலாஸ**மென்பதன் திரண்ட பொருளாம். இத்தகைய அகண்டாகார வ்ருத்தியை யுண்டுபண்ணும் ஆற்றல் இச் சிறந்த நூலுக்கு உண்டென்னும் விஷயம் இதை யொருமுறை வாசிப்பதனுலேயே தெரியவரும்.

அகண்டஞானத்தினாற்றுன் அழிவற்ற நித்தியாநந்தம் ஸித்திக்கும். இவ்வுலகில் ஒவ்வொரு ஜீவனும் தனக்குத் துக்கமே வேண்டாமென்றும், அழிவற்ற நித்திய ஸுகமே வேண்டுமென்றும் கருதுவது மிகப் பிரஸித்தமான விஷயம். இந்நித்திய ஸுகந்தான் மோக்ஷமெனப்படுவது.

**"यो वै भूमा तत्सुखं"**

**“யோ வை பூ⁴மா தத்ஸுக²ம்”**

எது வியாபகமான அகண்டஸ்வரூபமோ அதுவே ஸுகம். அதுவே நித்தியாநந்தம். அதுவே மோக்ஷம்.

கண்டமாகும் பேததிருஷ்டியாலேற்படுவனவெல்லாம் நஶ்வரமான விஷய ஸுகங்களே யாகும். விஷயஸுகங்கள், நசிக்கும்பொழுது, துக்கத்தையே தருவன

வாம். ஆதலின் அவை துக்கவடிவினவே யாகும். துக்கமென்பதே பந்தத்தின் சிறந்த லக்ஷணம். துக்கமே தனக்கு வேண்டாமென்னும் எண்ணமுடைய தன்மையால், ஒவ் வொரு ஜீவனுக்கும் நித்தியஸுகவடிவ மோக்ஷத்திலேயே பிரவ்ருத்தி யேற்படல் வேண்டும்.

நாசத்தோடு கூடிய விஷயஸுகங்களாலேற்படுவது பந்தமெனின், அப்பந்த மும் நாசத்தோடு கூடியதாகவேண்டும். பந்தம் எப்பொழுது நாசமாகுமெனின், **"தோன்றும் பேதம் பொய்"** என்னும் திருடமான நிச்சயம் ஏற்பட்டு **"அகண்ட அபேதவடிவ ஒன்றே யுண்மை"** யென்று உணரும் காலத்தில், பேதநாட்டத்தினுல் ஏற்பட்ட பந்தம் அறவே ஒழிந்துவிடும். அபேத நிச்சயஞானமோ வெனின், தோற்றும் பேதத்தை ஶ்ருதி, குருவாக்கியம், யுக்தி, ஸ்வாநுபவம் முதலியவைகளைக் கொண்டு நுட்பமாய் ஆராய்வதனுல் ஏற்படும். இந்த ஆராய்ச்சிக்கு விசாரமென்றுபெயர். இவ்விசாரம் இல்லாமையால் பந்தமும், விசாரத்தினுல் மோக்ஷமும் ஏற்படுகின்றன வென்பது,

**अविचारकृतो बन्धो विचारान्मोक्षो भवति ।**
**तस्मात्सदा विचारयेज्जगज्जीव परमात्मनः ॥**

**அவிசாரக்ருதோ ப³ந்தோ⁴ விசாரான்மோக்ஷோ ப⁴வதி ।**
**தஸ்மாத்ஸதா³ விசாரயேஜ்ஜக³ஜ்ஜீவ பரமாத்மனः ॥**

என்னும் ஶ்ருதிப்பிரமாணத்தால் ஶித்திக்கின்றது.

பேதம் தேச - கால - வஸ்து - பரிச்சேதமுடையதும் கற்பிதமுமாகும். அபேதம் தேச - கால - வஸ்து - பரிச்சேத ரஹித அநந்தஸ்வரூபமானதும் உண்மையுமாகும்.

பேத நாட்டத்திற்கு விஷயமான ஜகத்ஜீவ பரமேஶ்வரஸ்வரூபங்கள் கற்பனையும் உண்மையும் கலந்து தோன்றுவனவாகும்.

அகண்ட ஸச்சிதாநந்தஸ்வரூபத்தில் நாமரூப உபாதிகளோடுகூடிய ஜீவஜகத் பரபாவங்கள் மித்தையாம். மித்தையாய்த் தோன்றும் ஜகத்ஜீவ பரமென்னும் பேத அத்தியாஸம் ஸச்சிதாநந்தவடிவ அகண்ட அதிஷ்டான ஞானத்தால் ஒழியுமென்பது வேதாந்தஸித்தாந்தமாகும். நாமரூப அத்தியாஸத்தின் நீக்கமும், ஸச்சிதாநந்த அதிஷ்டானத்தின் பிராப்தியும் அகண்டாகாரருத்தியாலேயே ஏற்படுவனவாகும். ஆகவே பந்தஸ்வரூப துக்க நிவ்ருத்திக்கும், மோக்ஷவடிவ நித்தியாநந்த பிராப்திக் கும், அஸாதாரண அந்தரங்க ஸாதனமான அகண்டாகாரவ்ருத்தியை யுண்டு பண்ணும் சக்தி இந்நூலுக்குள்ளதென்று முன் கூறப்பட்டுள்ளது. ஆதலின் இந்நூல் ஒவ்வொரு ஜீவனுக்கும் அத்தியாவஶ்யமே யாகும்.

**कामकला - सोऽकामयत காமகலா - ஸோ(அ)காமயத** என்னும் ஜகத் சிருஷ்டி யின் இச்சையோடுகூடிய ஸர்வகாரண பரப்பிரஹ்மமே காம கலையாகும்.

போக்தாவாகும் ஜீவனும், போக்கியமாகும் பிரபஞ்சமும், பிரேரகனும் நியந்தா வுமான பரமேஸ்வானும் **காம கஜலயின் விலாஸமே** யாகும்.

ஏகமாயும், அத்விதீயமாயும், அஸங்க சின்மாத்திரமாயுமுள்ள பரப்பிரஹ்மம் எங்ஙனம் ஜகத்காரண காம கலாஸ்வரூபம் எய்திற்றென்னும் விஷயம் இந்நூலின் ஆரம்பத்தில் நன்கு விமர்சிக்கப்பட்டுள்ளது. இங்ஙனம் காமகலாஸ்வரூபத்தை விமர்சிக்கும் பாகத்திற்குத் **துரீயபாத**மென்று பெயர்.

இந்நூல் **துரீயபாதம்**, **அவித்தியாபாதம்**, **வித்தியாபாதம்**, **ஆநந்தபாத** மென் னும் நான்கு பாதங்களோடுகூடி விளங்குகின்றது. இத்தகைய விபாகம் நூலாசிரி யரால் செய்யப்படவில்ஜல. விஷயத்தின் போக்கைக் கொண்டு இத்தகைய விபாகம் செய்யப்பட்டது.

**அவித்யாபாதத்தில்** போக்கியரூப ஜடப்பிரபஞ்சத்தின் சிருஷ்டிக்கிரமம் கூறப் பட்டுள்ளது. பிரபஞ்சம் சப்தமயம், அர்த்தமயமென இருவகைத்து. சப்தஸ்வரூபமான மாத்ருகைகள் பரா, பஶ்யந்தீ, மத்யமை, வைகரியென நான்கு வகைப்படும். இவை கஜள வாக்குக்களென்றும் கூறப்படும். சப்தாத்மக பூதலிபிகளிலிருந்து பஞ்ச பூதங்கள் வடிவ அர்த்தப்பிரபஞ்சம் தோன்றிற்று.

அணுக்களென்னும் நாஞ ஜீவர்களின் சரீரமென்னும் பிண்டங்களும், பதிஞ ன்கு லோகங்களும், பிரஹ்மாண்டமும் பாஞ்சபௌதிகமேயாகும். ஜடஸ்வபாவ மாயுள்ள இவையாவும் அத்விதீய ஸச்சிதாநந்த பரப்பிரஹ்மத்தில் அத்தியஸ்த மாய்த் தோன்றுகின்றன. இதுதான் சிருஷ்டிக்கிரமத்தின் தத்துவம்.

**வித்தியாபாதத்தில்**, அத்விதீயப் பிரஹ்மத்தில் அத்தியஸ்தமாய்த் தோன்றும் நாமரூபப் பிரபஞ்சத்தை, ஸச்சிதாநந்த அகண்டவ்ருத்தியால் நீக்கி, அதிஷ்டான வடிவ பிரஹ்மாபின்ன ஆத்மஸ்வரூபத்தை யுணரும் வகை நன்கு கூறப்பட்டுள்ளது. இது,

**ब्रह्म सत्यं जगन्मिथ्या जीवो ब्रह्मैव नापरः ।**
**सर्वं खल्विदं ब्रह्म नेह नानास्ति किञ्चन ।**
**द्वितीयाद्वै भयं भवति । तत्त्वमसि ॥**

**ப்³ரஹ்ம ஸத்யம் ஜக³ன்மித்²யா ஜீவோ ப்³ரஹ்மைவ நாபரః ।**
**ஸர்வம் க²ல்வித³ம் ப்³ரஹ்ம நேஹ நாஞஸ்தி கிஞ்சன ।**
**த்³விதீயாத்³வை ப⁴யம் ப⁴வதி । தத்த்வமஸி ॥**

என்னும் அகண்டஞான போதகவாக்கியங்களால் ஏற்படுவதாகும். ஏகத்துவப் பிரதிபாதகங்களாகும் இம்மஹா வாக்கியங்கள் **வித்தியா**ஸ்வரூபமானவை.

அத்தியாத்மவித்தை, ராஜவித்தை, பிரஹ்மவித்தை, ஸ்ரீவித்தை, சித்வித்தை யென்பன பரியாய நாமங்களாம். ஸ்ரீவித்தை பஞ்சதசாக்ஷரீ வடிவினது. இதைக் குருமுகமாய் அறிந்து, மனன நிதித்தியாஸனங்களைச் செய்யின் ஸ்வரூப ஸாக்ஷாத் காரமேற்படுமென்பது பரமஸித்தாந்தமாகும். இந்த பாதத்தின் வியாக்கியானத்தில் புவனேஸ்வரி, பாலை, பஞ்சதசி, நவாக்ஷரீ, மஹாஷோடசீ, காயத்திரீ முதலிய மஹா வித்தைகளின் உத்தாரமும் அர்த்த விசாரமும் செய்யப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கது. இவ்வெல்லாவித்தைகளும் அபேதஞானப் பிரதிபாதகங்களே யாகும்.

ஆகவே, பேதமாகும் அவித்தையை யொழித்து அபேத தரிசனவடிவ தத்துவ ஞானத்தை யுண்டுபண்ணுவதே வித்தியாபாதத்தின் நோக்கமாகும்.

**ஆநந்தபாதத்தில்** அண்டபிண்ட வடிவ ஸ்ரீசக்கிரத்தின் ஆவிர்ப்பாவம் வெகு அழகாய் விமர்சிக்கப்பட்டுள் ஆநந்தமானது ஸமாதி வ்ருத்தியில் உணராமல் உணர்வதாகும். ஸமாதி இரண்டுவகை. அவை பாஹ்யாநுவித்தம், ஆந்தராநுவித்தம் என்பனவாம். இவை முறையே அண்ட பிண்டங்களின் விசாரத்தாலேற்படுவனவா கும். ஜகததிஷ்டான சேதனத்தையும், பஞ்சகோச விலக்ஷணமாயும் அவஸ்தாத்திரய ஸாக்ஷியாயுமுள்ள ஜீவாதிஷ்டான கூடஸ்த சேதனத்தையும், தத்பதலக்ஷ்யார்த்த பரமேஶ்வராதிஷ்டான பிரஹ்மசேதனத்தையும் ஐக்கியப்படுத்தினுல் பூமாஸ்வரூப நித்தியாநந்தம் ஸ்புரிக்கும். இத்தகைய அகண்டாநந்தஸ்புரணமே **ஆநந்த பாதத்தின் முக்கிய விஷயமாம்**.

ஸர்வாநந்தமய பிந்து சக்கிரத்தில் கூறப்படும் சிவசக்தி ஸாமரஸ்யமே இந்த அகண்டாநந்தமாம்.

பஞ்சதசாக்ஷரீ வித்தையின் அதிஷ்டாத்திரி அஹம் பதலக்ஷ்யார்த்தப் பிரத்தி யகாத்மாவே யென்றும், தத்பத லக்ஷ்ய நிருபாதிக பிரஹ்மமே ஸ்ரீ காமேஶ்வர ரென்றும் அறிதல் அத்தியாவசியம்.

திரிகோணம் முதல் பூபுரம் வரையுள்ள சக்கிரங்களெல்லாம் சப்தப் பிரபஞ்ச வடிவமாகவும், அர்த்தப் பிரபஞ்சவடிமாகவும் விளங்குகின்றன.

ஒவ்வொரு சக்கிரத்திலுள்ள **ஆவரணதேவதைகள்** யாவும் **மனோவ்ருத்திக ளின்** வடிவமாய் விளங்குகின்றன வென்பது பரமரஹஸ்யமாகும். ஸ்ரீசக்கிரம், ஸ்ரீ வித்தை, ஆவரணதேவதைகள், பூஜை முதலியவற்றின் தத்துவத்தை நன்கு அறியவிருப்பமுடையவர்கள் ஸ்ரீகுஹாநந்தமண்டலியில் பிரசுரித்துள்ள **ஸ்ரீ வித்யா ஸபர்யா**வாஸனையென்னும் நூலைப் பார்ப்பது அத்தியாவசியம்.

பரதேவதையின் விமர்ஶ சரணத்திலிருந்து ஆவரண தேவதைகளும், பிரகாச சரணத்திலிருந்து குருமண்டலமும் தோன்றினரென்பது நுட்பமாய் அறியத்தக்க விஷயமாகும். அன்றியும், இதில், அவிச்சின்ன (தொடர்பு கெடாத) குருபரம்பராக்கிர மம் மஹோட்டியாண துரீய பீடமாகும் பிந்துவில் விளங்கும் **ஸ்ரீ சர்யாநந்தநாதர்**

முதல் உபாஸகனது **குரு**வரையில் விமர்சிக்கப்பட்டுள்ளது கூர்மையாயுணரத்தக்கது. இவ்விஷயம் இந்நூலிலுள்ள சிறந்த விஷயங்களில் ஒன்றாகும்.

இது ஐம்பத்தைந்து ஆர்யாவ்ருத்தங்களால் ஆக்கப்பட்டுள்ள, மிகவும் பழைமையான ஸ்ரீவித்தியாப்பிரகரணம்.

## நூலாசிரியரின் காலம்.

காஶ்மீரதேசத்தில் மிகப்பிரஸித்திபெற்று விளங்கிய ஸ்ரீமத் பரமஹம்ஸ மஹாயோகி புண்ணியாநந்தநாதர் என்னும் இந்நூலிளுசிரியர் ஸகலவேத, வேதாந்த, நிகம, ஆகமங்களின் யதார்த்த தத்துவத்தை நன்குணர்ந்தவர்; ஸமயாசார தத்பரர். ஸ்ரீபராபட்டாரிகையாகும், அஹம் பதலக்ஷ்யார்த்ததை யபரோக்ஷமாய் அறிந்தவர். இவர் முமுக்ஷுக்களாகிய ஸாதகர்களிடத்திலுள்ள பரமகருணையால் தமது ஸ்வாநுபவத்தை இந்நூலின் மூலமாய் வெளியிட்டுள்ளார்.

இவரது காலம் இதுதானென்று நிர்ணயிப்பதற்குத் தக்கவெளிப்படையான ஆதாரங்கள் இல்லையாயினும், ஒருவாறு ஊஹித்தற்குத் தேவையான இரண்டொரு ஆதாரங்கள் கிடைத்துள்ளன. இவற்றைக் கொண்டு ஒருவாறு இந்நூலாசிரியரின் காலத்தை யூகிக்கலாமெனத் தோன்றுகின்றது.

இவருடைய **சிஷ்யர் ஸ்ரீ பரமஹம்ஸ அம்ருதாநந்தநாத**ராகும். இவர் வாமகேஶ்வரதந்த்ரத்தின் ஒருபாகமாகிய நித்தியாஷோடசிகார்ணவத்தின் கடைசிப் பாகமாகிய (6,7,8, விஶ்ராமங்கள்) **யோகிநீஹ்ருதயத்திற்குத் தீபிகை**யென்னும் பெயருள்ள ஒரு சிறந்த வியாக்கியானம் இயற்றியுள்ளார். இது மிகவும் பழைமையானது. ஸ்ரீ பாஸ்கர ராயர் இயற்றிய **ஸேதுபந்த**மென்னும் வியாக்கியானத்தில் "தீபிகை" யைப் பற்றிப் பிரஸ்தாபித்திருக்கின்றனர். ஸ்ரீ அம்ருதாநந்தரியற்றிய தீபிகா வியாக்கியானம் வெகு பழைமையான (பிராசீனமான) தென்று பாஸ்கரர் கூறியிருக்கின்றனர். இதனுல் பதினேழாம் நூற்றுண்டின் கடைசியிலிருந்த பாஸ்கரராயருக்கும் நெடுநாள் முன்னர் இவ்வாசிரியர் இருந்திருக்கவேண்டும்.

அன்றியும், ஸ்ரீ லகுஸ்துதிக்கு வியாக்கியானம் செய்தவர் ஸ்ரீ ராகவாநந்தராவர். இவரது குரு ஸ்ரீகிருஷ்ணுநந்த நாதரென்பவராவர்; இவரும் ஸ்ரீரகுநாத சிரோமணி, ஸ்ரீசைதன்னிய தேவர் முதலியவர்களும் ஸமகாலத்தவர். இவர்களின் காலம் 1460-1560 A. D. என்று ஏற்படுகின்றது. ஸ்ரீ கிருஷ்ணுநந்தரும் ஸ்ரீ அம்ருதாநந்தரும் ஸமகாலத்தவரென்பது சில ஆராய்ச்சியாளரின் அபிப்பிராயம். ஆகவே கி - பி. 1460 என்பது ஸ்ரீ புண்ணியாநந்தநாதரது காலமாயிருக்கலாமென்று மேற்கண்ட ஆதாரங்களால் ஒருவாறு தீர்மானிக்கலாமென்று தோன்றுகின்றது.

யோகினீஹ்ருதயத்தின் தீபிகா வியாக்யானத்தின் ஆங்கில முன்னுரையில்,

In the Catalogus Catalogorum (Vol. I.P.29) Aufrecht speaks of two more works as coming from his pen, *viz*., Ajnanabhedinitika and Tattvadipana (in Vedanta). But it is very

doubtful if the author of these latter Vedanta works was identical with the great Kashmir teacher of the same name. Weber's assertion (P. 361) referred to by Aufrecht, that Amṛtānanda corrected Krishnananda's Tantrasara is equally inapplicable to our author for the simple reason that Krishnananda who was a contemporary of Raghunatha Siromani, Sree Chaitanya Deva and Raghunandana of Nadia (1460--1560 A.D.) was a later writer than the author of the Dipikā.

என்று, ஸ்ரீகோபிநாத் கவிராஜ், M. A. கூறியிருக்கிறுர். இதன்படி கிருஷ்ணுநந்த நாதர் அம்ருதாநந்த நாதரைவிட வெகுகாலம் பிற்பட்டவரென்றேற்படுகின்றது. இவரது அபிப்பிராயத்தின்படி கிருஷ்ணுநந்த நாதரைவிட ஒரு நூற்றுண்டுக்கு முன் அம்ருதாநந்தநாதர் இருந்திருப்பாரென்று ஊஹிக்கின், அவரது காலம் சற்றேறக் குறைய கி.பி. 1400 என்றேற்படலாம். அவரது குருவாகிய புண்ணியாநந்த நாதரது காலம் சுமார் 50 வருடங்கள் முன் இருக்கலாம். ஆகவே கி.பி.1350 என்பது ஒருவாறு பொருந்தும். எனவே, இன்றைக்குச் சற்றேறக்குறைய 600 வருஷங்களுக்கு முன்னர் இந்நூலாசிரியர் இருந்திருக்கலாமெனத் துணிந்து கூறுதற்குக் கூடும்.

## இந்நூலின் வியாக்கியானங்கள்.

ஸ்ரீ காமகலா விலாஸத்திற்கு **ஸ்ரீ நடநாநந்த நாதரால்** இயற்றப்பட்ட **சித்வல்லி**யென்னும் பெயருள்ள ஒரு வடமொழி வியாக்கியானந்தான் தற்காலம் பிரஸித்தமாயுள்ளது. இவ்வியாக்கியானம், காஸ்மீரம், சென்னை, கார்வேட்டிநகரம் என்னும் மூன்றிடங்களிற் பதிப்பிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொன்றும் சிற்சிலவிடங்க ளில் வியக்கியானத்தில் மாறுபட்டுள்ளன. வியாக்கியாதா **ஸ்ரீ நடநாநந்தர்** எங்கிருந்தாரென்றும் எப்பொழுதிருந்தாரென்றும் புலப்படவில்லை.

தெலுங்கு பாஷையில் இதற்கு ரஹஸ்யார்த்த போதினியென்னும் மிக விரிவானவுரை விஜயநகரம் ஸிம்ஹம்பட்ல. **ராமமூர்த்தி சாஸ்திரி**யரால் இயற்றப் பட்டு அதுவும் தற்காலத்தில் உலவுகின்றது.

மேற் கூறப்பட்ட உரை நூல்கள்யாவும் ஸம்ஸ்க்ருத பாஷையில் ஸம்பூர்ண பாண்டித்தியம் இல்லாதவர்களும் தமிழ்ப்பாஷையில் பரிசயமுள்ளவர்களுமான ஸாதக முமுக்ஷுக்களுக்குப் பயன்படாததைக் கருதி மேற்கூறிய உரைகளைத் தழுவியும், அவற்றிலில்லாத அத்தியாவசியமான பல விஷயங்களை உபநிஷத்துக் கள், அத்வைதப் பிரகரணங்கள், வைதிக தந்த்ரங்கள் முதலியவற்றினின்றும் ஸங்கிரகித்து **ஆநந்தோல்லாஸ** மென்னும் விருத்தியுரை இயற்றப்பட்டுள்ளது. இதிலுள்ள விஷயங்கள் பெரும்பாலும் சென்னை ஸ்ரீகுஹாநந்த பிரஹ்ம வித்யா விமர்சினீ மண்டலியில் உபந்நியஸிக்கப்பட்டனவே யாகும்.

இவ்வுரையை அச்சிட்டுப் பிரசுரிப்பது அத்தியாவசியமெனப் பல ஆத்ம நண்பர்கள் வற்புறுத்திக் கூறியதால், காகிதம், மை முதலிய ஸாதனங்கள் பணம் தந்தாலும், கிடைக்காத இக்காலத்தில் அச்சிட்டு வெளியிடத் துணிந்தோம்.

இத்துணிவுக்குப் பரதேவதையின் பரிபூர்ண கடாக்ஷம் ஏற்பட்டது. எங்ஙன மெனின், ஒரு நாள் B.G. Paul கம்பெனியின் சொந்தக்காரரான **பிரஹ்மஸ்ரீ வாஜ பேயம் பாலஸுப்பிரஹ்மண்ய அய்யரைச்** சந்திக்க நேர்ந்தது. அப்போது அவரிடத் தில் காகிதத்தின் ஆவஶ்யகதையைப்பற்றிப் பிரஸ்தாபிக்கப்பட்டது. உடனே அவர் ஒரு பேல் (14 ரீம்) காகிதம் தருவதாக வாக்குறுதி கூறி, கூறியபடியே தந்தும் விட்டனர். ஆதலின் இந்நூல் அச்சிட்டு வெளிவருவதற்கு அவரே முதற்காரண மென்று கூறவேண்டியிருக்கிறது. அவர் செய்த நன்றி எஞ்ஞான்றும் மறக்கற்பால தன்று. பரதேவதையவருக்கு நோயற்ற நெடுவாழ்வும், குறையற்ற செல்வத்தோடு மற்றெல்லா நலங்களுமுண்டாகுமாறு கருணை புரிவாளாக.

இதனை யச்சிடுங்கால் வெகு ஸாவதானத்தோடு பிழைகளைப் பரிசோதித்துத் தமது சொந்தப் பிரசுரம் போல் பாவித்து எல்லாச் சிறப்புக்களும் நன்கமையும்படி அச்சிட்டுத்தந்த சென்னை, மயிலாப்பூர், ஸ்ரீபாலமனோரமா அச்சியந்திரசாலையின் சொந்தக்காரராகிய **பிரஹ்மஸ்ரீ சங்கரராம சாஸ்திரிகள்** M. A. B. L. அவர்கட்கு எஞ்ஞான்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன். அவர் செய்த உதவி வையத்தி னும் பெரிது.

மற்றும், இவ்வெளியீட்டின் ஸம்பந்தமாய்ப் பலர் அடியேனைத் தூண்டி உற்சாகப்படுத்தியும் சரீரசிரமமெடுத்துக்கொண்டும் முயன்றுள்ளார்கள். அவர்கட் கெல்லாம் பரதேவதை எல்லா நலங்களுமுண்டாகும்படி அநுக்கிரஹிப்பாளாக.

இவ்வரிய காரியத்தில் அடியேனை யீடுபடுத்திய ஸத்குரு ஸ்ரீ குஹாநந்தநா தரது அடியிணைகள் நன்கு விளங்குவதாக. சிவம்.

இங்ஙனம், விதேயன்.
**ந. சுப்ரஹ்மண்ய அய்யர்**

ஸ்ரீ குஹாநந்த மண்டலி
சென்னை.
19-10-42.

# விஷயஸூசிகை.

॥ श्रीः ॥
श्रीगुरुचरणारविन्दाभ्यां नमः ।
श्री महागणपतये नमः । श्रीपराभट्टारिकायै नमः ।

# ॥ श्रीकामकलाविलासः ॥

## मङ्गळाचरणम् ॥

वन्दे तन्मिथुनं दिव्यमाद्यमानन्दचिद्घनम् ।
अनुत्तरं परं ज्योतिरिति यद्भाव्यते बुधैः ॥

दीव्यन्तौ तमसः पारे स्त्रीपुंसौ व्यक्तविग्रहौ ।
जगतः पितरावाद्यावुपासे दिव्यदम्पती ॥
त्रयी सीमन्तसिन्दूररञ्जित श्रीपदाम्बुजौ ।
परब्रह्ममहामचे निविष्टौ भावये शिवौ ॥
नमस्तेज त्रयीसर्गविश्रान्तस्थानशक्तये ।
तदुत्तीर्णोर्ध्वविश्रान्तिस्फूर्तये गुरुमूर्तये ॥

सकलभुवनोदयस्थिति लयमयलीलाविनोदनोद्युक्तः ।
अन्तर्लीनविमर्शो भाति (पातु) महेशः प्रकाशमात्रतनुः ॥ १ ॥

॥ ஶ்ரீ꞉ ॥
ஶ்ரீ கு³ருசரணாரவிந்தா³ப்⁴யாம் நம꞉ ।
ஶ்ரீ மஹாக³ணபதயே நம꞉ । ஶ்ரீபராப⁴ட்டாரிகாயை நம꞉ ।

# ஶ்ரீ காமகலா விலாஸம்

## மங்க³ளாசரணம் ॥

வந்தே³ தன்மிது²னம் தி³வ்யமாத்³யமானந்த³சித்³த⁴னம் ।
அனுத்தரம் பரம் ஜ்யோதிரிதி யத்³பா⁴வ்யதே பு³தை⁴꞉ ॥

தீ³வ்யந்தௌ தமஸ꞉ பாரே ஸ்த்ரீபும்ஸௌ வ்யக்தவிக்³ரஹௌ ।
ஜக³த꞉ பிதராவாத்³யாவுபாஸே தி³வ்யத³ம்பதீ ॥
த்ரயீ ஸீமந்தஸிந்தூ³ரரஞ்ஜித ஶ்ரீபதா³ம்பு³ஜௌ ।

**பரப்³ரஹ்மமஹாமசே நிவிஷ்டௌ பா⁴வயே ஶிவௌ ॥**
**நமஸ்தேஜ த்ரயீஸர்க³விஶ்ராந்தஸ்தா²னஶக்தயே ।**
**தது³த்தீர்ணோர்த்⁴வவிஶ்ராந்திஸ்பூ²ர்தயே கு³ருமூர்தயே ॥**

**ஸகலபு⁴வனோத³யஸ்தி²தி லயமயலீலாவினோத³னோத்³யுக்த꞉ ।**
**அந்தர்லீனவிமர்ஶோ பா⁴தி (பாது) மஹேஶ꞉ ப்ரகாஶமாத்ரதனு꞉ ॥ 1 ॥**

# ஸ்ரீ காமகலா விலாஸம்.

## ஆநந்தோல்லாஸம்

**(என்னும் விருத்தியுரை)**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **सकल** ஸகல | = | ஸமஸ்தமான, |
| **भुवन** பு⁴வன | = | உலகங்களினுடைய, |
| **उदयस्थितिलयमय** உத³யஸ்தி²திலயமய | = | சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரமயமான, |
| **लीला** லீலா | = | யாதொரு பிரயத்தனமும் வருத்தமுமின்றி அநாயாஸமாய்ச் செய்யத்தக்க காரியமாகும், |
| **विनोदन** வினோத³ன | = | விளையாட்டைக் கண்டுகளிப்பதற்கு, |
| **उद्युक्तः** உத்³யுக்த꞉ | = | தயாராய் இருப்பவரும், |
| **अन्तर्लीनविमर्शो** அந்தர்லீனவிமர்ஶோ | = | தனக்குள் அடங்கிய விமர்சசக்தியை யுடைய வரும், |
| **प्रकाशमात्रतनुः** ப்ரகாஶமாத்ரதனு꞉ | = | பிரகாசமாத்திரத்தையே சரீரமாகவுடைய வருமான, |
| **महेशः** மஹேஶ꞉ | = | ஸர்வக்ஞத்துவாதி ஈஶ்வர சக்திகளையுடைய பரமாத்மாவானவர், |
| **भाति** பா⁴தி | = | ஸ்வயம் பிரகாசமாய் விளங்குகின்றனர். |

**குறிப்பு:** - அச்சிடப்பட்டு தற்காலம் விளங்கும் புஸ்தகங்களில் **"பாது" (பாது)** என்றுதான் இருக்கின்றது. = ரக்ஷிக்கட்டும் என்று வியாக்கியானம் செய்துள்ளது.

**சங்கை**: - அவித்தியாப்பிரபஞ்சம் சிருஷ்டிக்கப் படாமலேயிருக்கையில் முமுக்ஷுவாகிய ஜீவனது அபாவத்தினுல் **पातु** (**பாது**) என்னும் கிரியைக்குக் கர்மாபாவம் (செயப்பட்டு பொருளின் இன்மை) ஏற்படுகின்றது. ஆதலின் **भाति** (**பா⁴தி**) யென்னும் பதமே ஸமஞ்ஜஸமாயிருக்கின்றது. மற்றெரு பாடத்தின்படி **जयति** (**ஜயதி**) என்று இருக்கின்றது. இதன்படி **"महेश: जयति" மஹேஶ: ஜயதி** பரமாத்மா மிகச்சிறப்பாய் விளங்குகின்றனர் என்றேற்படுகின்றது.

(**விசேஷவுரை**) ஸகல உபநிஷத்துக்களின் தாத்பரியத்தையும், ஸகல நிகம ஆகமங்களின் ரஹஸ்யங்களையும் நன்குணர்ந்து, தனது நிஜஸ்வரூபத்தைச் சந்தேஹ விபரீதங்களற நன்குணர்ந்தவரும், தான்பெற்ற வொரு மஹா பலத்தை யுலகத்தில் ஒவ்வொருவரும் பெறவேண்டும் என்னும் பரம கருணையுடையவரு மாகிய **ஸ்ரீ புண்ணியாநந்த முனீந்திரர்** ஆத்மப்பிரஹ்மைக்கிய பரமஸாதனமாகிய பிரஹ்மவித்தையென்னும் ஸ்ரீ வித்தையையும், ஸ்ரீ சக்கிரத்தையும் தக்க அதிகாரிகள் ஸந்தேக விபரீதங்களற நன்குணருமாறு விமர்சிக்க எண்ணங்கொண்டு சக்கிர வித்தைகளின் அதிஷ்டானஸ்வரூபமாகிய ஸர்வகாரண **காமகலா** ஸ்வரூபத்தை இதுமுதல் எட்டு ஶ்லோகங்களால் நிரூபிக்கின்றனர்.

இந்த எட்டு ஶ்லோகங்களும் துரீயபாதமெனப்படும்.

ஸ்ரீ காமகலா விலாஸமாகும் இச்சிறந்த சாஸ்திரமானது துரீயபாதம், அவித்தியாபாதம், வித்யாபாதம், ஆநந்தபாதமென நான்கு பாதங்களாகப் பிரிக்கப் பட்டு விளங்குகின்றது.

துரீயபாதத்தில் வித்தியாப்பிரபஞ்ச காரணமான காம காமேஶ்வரர்களின் ஸ்வரூபம் நன்கு விமர்சிக்கப்பட்டுள்ளது.

பிரபஞ்சம் இரண்டு வகைப்படும். அவித்தியாப்பிரபஞ்சம் ஒன்று; வித்தியாப் பிரபஞ்சம் மற்றென்று. துவைத வ்ருத்தியோடு கூடிவிளங்குவது அவித்தியாப்பிர பஞ்சமும், அகண்டாகாரவ்ருத்தியோடு கூடி விளங்குவது வித்தியாப்பிரபஞ்சமுமா கும்.

அவித்தியாபாதத்தில், சித்சக்தியை ஆச்ரயித்துத் தோன்றும் கற்பித ஜடசக்தி யாகும் மாயாவிசிஷ்ட சேதனத்தை அவித்தியாப்பிரபஞ்சத்திற்கு காரணமாகக் கூறப் பட்டுள்ளது. இது **அபராகாமக**லையெனச் சாஸ்திரங்கள் கூறுகின்றன. இதற்கு நாதம் அல்லது சப்தப் பிரஹ்மமென்று பெயர். இந்த சப்தப்பிரஹ்மத்திலிருந்து நாமாத்மக சப்த சிருஷ்டியும், அதிலிருந்து ரூபாத்மக அர்த்த சிருஷ்டியும் ஏற்பட்டன. நாம ரூபாத்மக அவித்தியாப் பிரபஞ்சத்தை வித்தையாகும் ஆத்மப் பிரஹ்மைக்கிய ஞானத்தால் நிஷேதித்து நித்தியாநந்தத்தையடையும் விதம் வித்தியாபாதத்தில் கூறப்பட்டுள்ளது. ஆநந்தபாதத்தில் ஆந்தராநுவித்தம், பாஹ்யாநுவித்தம் எனக் கூறப்படும் இருவித ஸமாதிகளின் ஸாதனங்கள் நன்கு கூறப்பட்டுள்ளன. பாஹ்யாப் பியந்திரங்கள் இரண்டையும் ஸ்ரீசக்கிரமாக நிரூபித்து, ஆவரண தேவதைகளின்

தத்துவத்தையும் விமர்சம் செய்து, பிண்டத்தில் பஞ்சகோசவிலக்ஷணமாய் விளங்கும் (துவம்) அஹம்பதலக்ஷ்யார்த்தப் பிரத்யகாத்மவடிவ காமேஶ்வரியை அண்டத்தில் நாமரூபங்களுக்கு அதிஷ்டான தத்பத லக்ஷ்யார்த்த நிருபாதிக ஸம்வித் ஸ்வரூப காமேஶ்வரரோடு ஐக்கியம் செய்து ஆநந்தகனமாய் விளங்கும் நிஜ ஆநந்தபாதத்தின் விஷயமாகும்.

என்றும் அழியாத நித்தியாநந்தத்தைப் பெற விரும்புகின்றவர் தமது உண்மையான (ஆத்ம) ஸ்வருபத்தை யறிதல் வேண்டும்.

**"तरति शोकमात्मवित्"**

**"தரதி ஶோகமாத்மவித்"**

இது, தன்னைத்தான் அறிதலாகும்.

**"ब्रह्मविद्ब्रह्मव भवति; ब्रह्मविदाप्नोति परम्"**

**"ப்³ரஹ்மவித்³ரஹ்மவ ப⁴வதி; ப்³ரஹ்மவிதா³ப்னோதி பரம்"**

என்னும் பிரமாணங்களால், பிரஹ்மாண்டத்தின் அதிஷ்டான ஸ்வரூபத்தை நன்கு ணர்ந்து அதனோடு தனது ஸ்வரூபத்தை ஐக்கியம் செய்வதுதான் ஸகலவேதாந்தங்களின் பரம ஸித்தாந்தமாகும்.

இந்த பரமஸித்தாந்தத்தைக் கரதலாமலகம் போல் நிரூபிப்பதற்கே ஸ்ரீ காமகலா விலாஸமென்னும் இக்கிரந்தம் ஆரம்பிக்கப்படுகின்றது. **"காமகலாவிலாஸம்"** என்பதன் அக்ஷரார்த்தமாவது: -

**क् + अ + अ = का ;**
**म् + अ = म;**
**क् + अ = क;**
**ल् + अ = ला.**

**क्** = மாயை; **अ** = சேதனம்; **क** = மாயாவிசிஷ்ட சேதனம்; **अ** = சுத்த சேதனம். **म्** = அவித்தை; **अ** = சேதனம்; **म** = அவித்தியாவிசிஷ்ட சேதனன்; ஜீவன்.

**क्** = ஆகாசம்; **ल्** = பிரிதிவீ; **कल** = ஆகாசாதி பஞ்ச பூதங்களின் உபஹித சேதனம். **अ** = சுத்த சேதனம்.

**"பிரபஞ்சாதிஷ்டான சேதனமும், ஜகத்காரண பரமேஸ்வர சேதனமும், ஜீவா திஷ்டான கூடஸ்த சேதனமும் ஒன்றே யென்னும் அகண்டாகாரவ்ருத்தி யின் விலாஸமே காமகலா விலாஸ"** மென்பதன் திரண்ட பொருளாம்.

**विशेषेण लसनं विलासः (விஶேஷேண லஸனம் விலாஸः)** = ஜீவப்பிரஹ்மை க்கிய அபரோக்ஷ ஞானத்தினுல் அநுபவிக்கப்படும் ஆநந்தமே விலாஸமாகும்.

இனி முதலாவது ஶ்லோகத்தின் விரிவுரை கூறப்படுகின்றது.

**"प्रपञ्चोपशमं शान्तं शिवमद्वैतं" (ப்ரபஶ்சோபஶமம் ஶாந்தம் ஶிவமத்³வைதம்)** என்று கூறும் உபநிஷத்தின் அர்த்தந்தான் இந்த முதல் ஸ்லோகத்தில் நிரூபிக்கப்படு கின்றது. அது வருமாறு: -

**सकलभुवनोदयस्थितिलयमयलीलाविनोदनोद्युक्तः**
**ஸகலபு⁴வனேத³யஸ்தி²திலயமயலீலாவினேத³னேத்³யுக்தः**
= என்பதனுல் சாந்தஸ்வரூபத்தன்மையும்,
**अन्तर्लीनविमर्शः அந்தர்லீனவிமர்ஶः**
= என்பதனுல் பிரபஞ்சோபசமத்தன்மையும்,
**महेशः மஹேஶः** = என்பதனுல் சிவஸ்வரூபமும்,
**प्रकाशमात्रतनुः ப்ரகாஶமாத்ரதனுः** = என்பதனுல் அத்வைதஸ்வரூபமும் அறிவிக்கப்படுகின்றன.

இங்ஙனம் கூறப்பட்ட லக்ஷணங்களோடு கூடிய துரீய ஸ்வரூபமானது ஆத்மாபின்னமாய் அறியத்தக்கதாகும். இதுதான் பிரஹ்மஸ்வரூபம்.

நூலாசிரியர் இந்த முதல் ஶ்லோகத்தில் "பிரஹ்மம் விளங்குகின்றது" என்று கூறி மங்கலம் இயற்றுகின்றனர்.

மங்கலம் மூன்றுவகை: அவை வஸ்து நிர்த்தேசம், ஆசீர்வாதம், நமஸ்கார மென்பனவாம். இவற்றுள், இது வஸ்து நிர்த்தேசரூப மங்கலமாகும்.

**महेशः மஹேஶः** - தேசகால வஸ்து பரிச்சேதமற்றவராயும், ஸர்வநியந்தா வாயுமுள்ள பரமாத்மா.

**यो वेदादौ स्वरः प्रोक्तो वेदान्ते च प्रतिष्ठितः ।**
**तस्य प्रकृतिलीनस्य यः परः स महेश्वरः ॥**

**யோ வேதா³தௌ³ ஸ்வரः ப்ரோக்தோ வேதா³ந்தே ச ப்ரதிஷ்டி²தः ।**
**தஸ்ய ப்ரக்ருதிலீனஸ்ய யः பரः ஸ மஹேஶ்வரः ॥**

**(தாத்பர்யம்)** "வேதத்தின் ஆதியாகும் பிரணவமானது யாருக்கு வாசகமோ **(तस्य वाचकः प्रणवः) (தஸ்ய வாசகः ப்ரணவः)** யார் வேதாந்தமாகும் உபநிஷத் துக்களில் பிரதிபாதிக்கப் படுபவரோ, யார் பிரணவோபாதிகள் லயிக்கும் பிரக்ருதிக்

கும் அதீதமானவரோ, அவரே மஹேஸ்வரராவர்" என்னும் ஸ்ருதியின் பொருள் இங்கே அறியத்தக்கது.

**प्रकाशमात्रतनुः ப்ரகாஶமாத்ரதனுः** ஸ்வயம்பிரகாசமே சரீரமாயுடையவர்; இதற்குப்பிரமாணங்களாவன: -

**न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं**
**नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्भिः**
**तमेव भान्तमनुभाति सर्वं**
**तस्य भासा सर्वमिदं विभाति ॥**

**ந தத்ர ஸூர்யோ பா⁴தி ந சந்த்³ரதாரகம்**
**நேமா வித்³யுதோ பா⁴ந்தி குதோ(அ)யமக்³பி⁴:**
**தமேவ பா⁴ந்தமனுபா⁴தி ஸர்வம்**
**தஸ்ய பா⁴ஸா ஸர்வமித³ம் விபா⁴தி ॥**

(**தாத்பர்யம்**) ஸூர்யன், சந்திரன், மின்னல், அக்கினி முதலிய பௌதிகப் பிரகாச வஸ்துக்கள் ஸ்வயம் பிரகாசவடிவ பிரஹ்மத்தின்கண் பிரகாசிக்கா: பிரஹ்மம் இதர பிரகாசத்தை யபேக்ஷிக்காமல் தானே விளங்கிக்கொண்டு மற்ற ஜடப்பொருள்களையெல்லாம் பிரகாசிக்கச் செய்கின்றது. அதனுல் அது **ज्योतिषां ज्योतिः ஜ்யோதிஷாம் ஜ்யோதிः** என்று கூறப்படுகின்றது. **"आकाशशरीरं ब्रह्म"** "**ஆகாஶஶரீரம் ப்³ரஹ்ம**" அகண்டமாய் எங்கும் விளங்கும் பிரகாசத்திற்கு ஆகாச மென்று பெயர். இந்த ஆகாசத்தைச் சரீரமாயுடையது பிரஹ்மமாகும்.

**अन्तर्लीनविमर्शः; विमृश्यत इति विमर्शः = प्रपञ्चः; अन्तर्लीनः अन्तर्गतो यस्य सः**

**அந்தர்லீனவிமர்ஶः; விம்ருஶ்யத இதி விமர்ஶः = ப்ரபஞ்சः; அந்தர்லீனः அந்தர்க³தோ யஸ்ய ஸः**
தனக்குள் லயமாயுள்ள பிரபஞ்சத்தையுடையவன்; அல்லது, தனக்குள் அடங்கிய விமர்ச சக்தியையுடையவன்.

**परिपूर्णोऽहम्; असङ्गोऽहम्; आनन्दघनोऽहम्; सच्चिदानन्दोऽहम्; ब्रह्मवाहम्**

**பரிபூர்ணோ(அ)ஹம்; அஸங்கோ³(அ)ஹம்; ஆனந்த³க⁴னோ(அ)ஹம்; ஸச்சிதா³னந்தோ³(அ)ஹம்; ப்³ரஹ்மவாஹம்**

என்பன விமர்ஸ்வரூபமாகும். ஆத்மப்பிரஹ்மைக்கிய அபரோக்ஷ ஞானமேற்படும் வரையில் தான், இந்த விமர்சவடிவ அநுஸந்தான அநுபூதிகளுக்குப் பிரயோஜன முண்டு; ஏற்பட்டபிறகு, இவ்வகண்டவருத்திக்கு யாதொரு பயனுமின்மையின், அது மஹாபிரகாசவடிவ பிரஹ்மத்தில் லீனமாகின்றது. இது **வித்தியாப் பிரபஞ்சமாகும்**.

இச்சிக்கிறேன், அறிகிறேன், செய்கிறேன், என்று இதமாகாரப் பிரபஞ்சத்தோடு தன்னைச் சேர்த்துக் கொண்டு விவகரிப்பன யாவும் அவித்தியாப் பிரபஞ்ச விமர்ச மாம். இந்த அவித்தியாப் பிரபஞ்சவிமர்சம், தினப் பிரளயமாகும் ஸுஷுப்தியிலும், மஹாப் பிரளயத்திலும் முறையே அதிஷ்டானவடிவ கூடஸ்த பிரஹ்மங்களில் லீனமாயிருக்கின்றது.

**यतो वा इमानि भूतानि जायन्ते येन जातानि जीवन्ति यत्प्रयन्त्यभिसंविशन्ति तद्विजिज्ञासस्य तद्ब्रह्मेति ॥**

**யதோ வா இமானி பூ⁴தானி ஜாயந்தே யேன ஜாதானி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபி⁴ஸம்விஶந்தி தத்³விஜிஜ்ஞாஸஸ்ய தத்³ப்³ரஹ்மேதி ॥**

என்னும் ஸ்ருதி, ஜகத்தின் ஜன்ம ஸ்திதி லயங்களின் அதிஷ்டானஸ்வரூப த்தை நிர்ணயிக்கின்றது.

**सकलभुवनोदयस्थितिलयमयलीलाविनोदनोद्युक्तः**

**ஸகலபு⁴வனோத³த்³யஸ்தி²திலயமயலீலாவினோத³னோத்³யுக்தஃ**

ஸகல பிரபஞ்களின் சிருஷ்டி ஸ்திதி லயங்களும், உபலக்ஷணமாய்த் திரோபாவ அநுக்கிரஹங்களுமாகிய பஞ்சகிருத்தியங்களின் மயமான லீலைகளைச் செய்து சந்தோஷிக்கத் தயாராயிருப்பவர். இவர் பரமாத்மா.

பஞ்சகிருத்தியமய லீலை பரமாத்ம நிஷ்டமானது. பஞ்சகிருத்தியங்கள் பிரபஞ் சநிஷ்டம். இங்கே **मयट् மயட்** பிரத்யயத்திற்குப் பிராசுர்யார்த்தங்கூறுதல் தகுதி யாகும். **अन्नमयो यज्ञः; सृण्मयो हि घटः அன்னமயோ யஜ்ஞஃ; ஸ்ருண்மயோ ஹி க⁴டஃ** என்பனவற்றைப்போல.

**"इच्छामात्रं प्रभोः सृष्टिः । बहु स्यां प्रजायेयेति । तदा- त्मानं स्वयमकुरुत ।।**

**चिदात्मैव हि देवोऽन्तः स्थितमिच्छावशाद्बहिः ।**
**योगीव निरुपादानमर्थजातं प्रकाशयेत् ॥**

**"இச்சா²மாத்ரம் ப்ரபோ⁴ஃ ஸ்ருஷ்டிஃ । ப³ஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி ।**
**ததா³- த்மானம் ஸ்வயமகுருத ॥**

**சிதா³த்மைவ ஹி தே³வோ(அ)ந்தஃ ஸ்தி²தமிச்சா²வஶாத்³வஹிஃ ।**
**யோகீ³வ நிருபாதா³னமர்த²ஜாதம் ப்ரகாஶயேத் ॥**

**(தாத்பர்யம்)** சித் ஸ்வரூபரான பரமாத்மதேவன் தனது இச்சையினால், ஒரு மஹாயோகியைப் போல், தனக்குள் அடங்கியுள்ள, நிருபாதான (தனக்கென ஒரு காரணமுமின்றிய) அர்த்த ஜாத (பிரபஞ்ச) த்தைப் பிரகாசப் படுத்துகிறார்."

**"स्वेच्छया स्वभित्तौ विश्वमुन्मीलयति"**

**"ஸ்வேச்ச²யா ஸ்வபி⁴த்தௌ விஶ்வமுன்மீலயதி"** (சக்தி ஸூத்திரம்)

என்பனவாதி பிரமாணங்களினுல் பிரபஞ்சத்தின் சிருஷ்டியாதிகள் பரமாத்மாவின் இச்சாமாத்திரமேயாமென நன்கு விளங்குகின்றது.

ஜகத்சிருஷ்டியாதிகள் பரமாத்மாவின் விளையாட்டேயாகும். அவற்ருல் பரமாத்மாவுக்கு யாதொரு பயனுமில்லை:

**"लोकवत्तु लीला कैवल्यं। ब्रह्मण:**
**विचित्रकार्यरचना केवललीलामात्रं; न फलसापेक्षम्"**

**"லோகவத்து லீலா கைவல்யம்। ப்³ரஹ்மணঃ**
**விசித்ரகார்யரசனு கேவலலீலாமாத்ரம்; ந ப²லஸாபேக்ஷம்"**

என்னும் பிரமாணங்கள் ஈண்டறியத்தக்கன.

**"लीलाक्लुप्तब्रह्माण्डमण्डला"** **"லீலாக்லுப்தப்³ரஹ்மாண்ட³மண்ட³லா"**

என்னும் ஸஹஸ்ரநாம வசனம் இந்த அர்த்தத்தை வலியுறுத்துகின்றது.

## ஜகத்சிருஷ்டியைப்பற்றிய விசாரம்

சிருஷ்டியைப்பற்றிக் கூறுதல் வேதத்தின் பரம தாத்பரியமன்று; ஜீவர்கள் இந்த ஜகத்தைப் பிரத்தியக்ஷமாய் அறிவதனுல், அதன் தன்மையைப்பற்றி யவர்களுக்குப் போதிக்க, அவர்களின் வார்த்தைகளை யநுவாதஞ் செய்து கொண்டு வேதம் ஜகத்சிருஷ்டியைக் கூறுகின்றது.

**सदेव सोम्येदमग्र आसीत्। मायी सृजते विश्वमेतत्।**
**स तपोऽतप्यत। स तपस्तप्ता इदूँ सर्वमसृजत॥**

**यथा सुदीप्तात्पावकाद्विस्फुलिङ्गाः सहस्रशः प्रभवन्ते सरूपाः।**
**तथाऽक्षराद्विविधाः सोम्य भावाः प्रजायन्ते तत्र चैवापियन्ति॥**

**ஸதே³வ ஸோம்யேத³மக்³ர ஆஸீத் । மாயீ ஸ்ருஜதே விஶ்வமேதத் ।**
**ஸ தபோ(அ)தப்யத । ஸ தபஸ்தப்தா இதூ³ம் ஸர்வமஸ்ருஜத ॥**

**யதா² ஸுதீ³ப்தாத்பாவகாத்³விஸ்பு²லிங்கா³ঃ**
**ஸஹஸ்ரஶঃ ப்ரப⁴வந்தே ஸரூபாঃ ।**
**ததா²(அ)க்ஷராத்³விவிதா⁴ঃ ஸோம்ய பா⁴வாঃ**
**ப்ரஜாயந்தே தத்ர சைவாபியந்தி ॥**

முதலிய உபநிஷத் பிரமாணங்கள் பிரஹ்மமே ஜகத் காரணமென்று பறை சாற்றுகின்றன.

காரணம் இரண்டு வகை - ஒன்று உபாதான காரணம்; மற்றென்று நிமித்த காரணம். ஒரு கடத்திற்கு மண் உபாதான காரணமும், குலாலன் தண்ட சக்கிராதிகள் நிமித்தகாரணங்களுமாகும். கடமாகிய காரியத்திற்கு வேருக நிமித்தகாரணங்கள் இருப்பது அறியத்தக்கது.

பரமாத்மாவை ஜகத்காரணனுகவொப்பின், அவன் ஜகத்காரியத்திற்கு உபாதான காரணனு? நிமித்தகாரணனு? திருஷ்டாந்தத்தின்படி அவன் இரண்டு காரணங்களில் ஒரு காரணமாகத்தான் இருக்கமுடியும். இங்ஙன ஒப்பின் மற்றெரு காரணம் பரமாத்ம பின்னமாகவே இருக்க நேரும்; பரமாத்மாவைவிடப் பின்னமாக மற்றெரு பொருளை யொப்பின், பரமாத்மா கண்டிதனுய், அதனுல் ஸாவயவியாய், அதனுல் ஆதியந்தங்களுடையவனுய் ஒழிவன். இங்ஙனம் கூறுதல் ஶ்ருதிவிரோத மாகும். ஆதலின், பரமாத்மாவொருவனே இந்த ஜகத்திற்கு உபாதான காரணமாக வும், நிமித்தகாரணமாகவும் ஒப்புதல் வேண்டும். இங்ஙனம் ஒப்புதற்குத் திருஷ்டாந் தம் உண்டோவெனில் அது கூறப்படுகின்றது.

**यथोर्णनाभिः सृजते गृह्णते च**
**तथाऽक्षरात् संभवतीह विश्वम् ॥**

**யதோ²ர்ணநாபி⁴: ஸ்ருஜதே க்³ருஹ்ணதே ச**
**ததா²(அ)க்ஷராத் ஸம்ப⁴வதீஹ விஶ்வம் ॥**

**(தாத்பர்யம்)** "எங்ஙனம் (எட்டுக்கால்) சிலந்தியானது தனக்குப் பின்னமான வேறுகாரணமின்றியே மெல்லிய நூற்களை யுண்டாக்கி வலைபின்னி யதில் வசித்தி ருந்து மறுபடியும் அதை விழுங்கித் தன்னில் லயப்படுத்திக் கொள்ளுகின்றதோ, அங்ஙனமே அக்ஷரமாகும் பரமாத்மாவிலிருந்து, இதரகாரணுபேக்ஷையின்றி, இந்த ஜகத்தானது பரமாத்மாவிற்கு அபின்னமாயும், விலக்ஷணமாயும் உண்டாகின்றது." என்னும் ஶ்ருதிப்பிரமாணம் பரமாத்மாவிற்கு ஜகத்தின் உபாதான நிமித்தகாரணங் களைக் கூறுகின்றது.

## உபாதான காரணவிமர்சம்.

ஆரம்பம், பரிணுமம், விவர்த்தம் என உபாதான காரணம் மூன்றுவகைப்படும்.

**ஆரம்போபாதானகாரணம்: -** சக்கரங்கள், மையக்கட்டை, ஏர்க்கால், இருசு, முதலிய பலகாரணங்களாலானது வண்டியென்னும் காரியமாம். இங்கே சக்கரங்கள், மையக்கட்டை முதலியன ஆரம்ப உபாதான காரணங்களாகும். குறுக்கும் நெடுக்கு மாயுள்ள தந்துக் (நூற்) கள் வஸ்திரத்தின் ஆரம்ப உபாதான காரணங்கள்.

**பரிணாமி உபாதானகாரணம்:** - கடகாரியத்திற்குக்களிமண் பரிணாமி உபாதான காரணம். தயிருக்குப் பால் பரிணாமி உபாதானகாரணம். இவற்றுள் களி மண் அவிகாரபரிணாமிகாரணமும், பால் விகாரபரிணாமிகாரணமுமாகும்.

**விவர்த்தோபாதானகாரணம்:** - கயிற்றில் தோன்றும் பாம்பிற்குக் கயிறு விவர்த்தோபாதான காரணம், ஸ்வப்ன உலகத்திற்கு மனம் விவர்த்த உபாதான காரணம். என்றால், அத்தியாஸமாய்த் தோன்றும் மித்யாகாரியத்திற்கு அதன் அதிஷ்டானத்தைக் காரணமாக வொப்புதல் விவர்த்தகாரணமாகும்.

இந்த ஜகத்தானது பிரஹ்மத்தின் கண் அத்தியாஸமாய்த் தோன்றுகின்றது. ஆதலின், பிரபஞ்சம் மித்தையாம். பிரபஞ்சமாகும் அத்தியாஸத்திற்கு அதிஷ்டானம் பிரஹ்மமாதலின், பிரபஞ்சத்திற்குப் பிரஹ்மம் விவர்த்த காரணம் ஆகவேண்டும். ஆதலின் பிரஹ்மம் பரமாத்மா) இந்த ஜகத்தின் **அபின்ன நிமித்தோபாதான விவர்த்த** காரணமெனச் சித்தித்தது.

காமகலைக்கு இத்தகைய காரணத்துவம் ஒப்புதலே **ஸமஞ்ஜஸமாகும்**. காரண காரியவிசாரம் பிரஸங்கானு ஸாரமாய் அங்கங்கே செய்யப்படும்.

**भाति பா⁴தி** - ஸ்வயம் பிரகாசமாய் விளங்குகின்றது. பிரகாசமாத்திரத்தையே சரீரமாயுடைய தன்மையால். பிரஹ்ம விளக்கத்திற்கு எப்பொழுதும் ஹாநியின்று; அங்ஙனமாயின் அதுயாவருக்கும் விளங்கவேண்டுமன்றோ? எனின், அது யாவரு க்கும் விளக்கமாகவே யிருக்கின்றது. ஆனால், அவ்விளக்கத்தையுணரும் சாமர்த்தி யம் மாத்திரம் யாவருக்கும் இல்லை. எவர்களுடைய அந்தக்கரணமானது சுத்த ஸத்துவப் பிரதான அகண்டாகார வ்ருத்தியோடு கூடியுள்ளதோ, அவர்கள் யாவரும் பிரஹ்ம விளக்கத்தையறியும் சாமர்த்திய முடையவராவர்; மற்றவர்க்கு அவ்வாற்ற லின்மையின், விளங்கவில்லையென்று அவர் கூறுகின்றனர்.

மங்கலமாகும் இம்முதல் ஶ்லோகத்தில் **भाति பா⁴தி** யெனக் கூறப்பட்டிருப் பதால் இக்கிரந்தத்தின் முக்கிய பலமாகிய **அபானுபாதக ஆவரணத்தின் நிவர்த்தி** ஸூசிப்பிக்கப் பட்டது அறியத்தக்கது.

"பிரஹ்மம் விளங்கவில்லை" யென்பது அபாநாபாதக ஆவரணமாம். இதன் நிவர்த்தி பிரஹ்மத்தின் அபரோக்ஷ ஞானத்தினல் ஆகும். ஆத்மாபின்ன பிரஹ்மா பரோக்ஷ ஞானந்தானே ஸ்ரீபிரஹ்மவித்தையின் முக்கியமான பயன்?

இந்த முதல் ஶ்லோகத்தினல் இதன் ஆசிரியர் இந்நூலின் நான்கு பாதங்க ளையுங்கூடக் குறிப்பாய்க் காட்டுகின்றனர். அது வருமாறு: -

(1) **प्रकाशमात्रतनुः ப்ரகாஶமாத்ரதனு:** துரீயபாதம்.

(2) **सकल ... लीलाविनोदनोद्युक्तः ஸகல... லீலாவினோத³னோத்³யுக்த:**
அவித்தியா பாதம்.

(3) **महेशः மஹேஶ:** வித்தியாபாதம்.

(4) **अन्तर्लीनविमर्शः அந்தர்லீனவிமர்ஶ:** ஆநந்தபாதம்.

“**पातु**” “**பாது**” என்னும் மற்றெரு பாடத்தின்படி விசேஷவுரை கூறப்படுகின்றது.

**पालनं பாலனம்** என்பது இரக்ஷணே. அபாயத்திலிருந்து காப்பதே ரக்ஷணே யாகும். அபயந்தருதலென்பதும் இதுவே. பாரமார்த்திகமான அபயம் அத்வைத ஞானத்தாலேற்படுவதாகும்.

**"अभयं वै जनक प्राप्तोऽसि । अभेददर्शनात् । द्वितीयाद्वै भयं भवति"**

**“அப⁴யம் வை ஜனக ப்ராப்தோ(அ)ஸி । அபே⁴த³த³ர்ஶனாத் ।**
**த்³விதீயாத்³வை ப⁴யம் ப⁴வதி”**

என்னும் பிரமாணங்கள் நன்கு விமர்சிக்கப்படுமேயாயின், “**पातु**” “**பாது**” என்பதன் உண்மையான அர்த்தம் ஆத்மப் பிரஹ்மைக்கிய ஞானத்தின் உபதேசமே யாகுமெ ன்பது தெளிவாய்ப் புலப்படும்.

ஐக்கிய ஞானஸ்வரூபமே பிரஹ்ம வித்தையாகும். ஆகவே பிரஹ்மவித்தை ஸூசிப்பிக்கப்பட்டது. “**पातु**” “**பாது**” என்னுங் கிரியைக்கு மஹேசன் கர்த்தாவாதலின் அவனே பிரஹ்ம வித்யோபதேஷ்டாவாவன் : ஈஶ்வரனும் குருவும் தம்முள் அபேதரே யாவர்.

**"ईश्वरानुग्रहादेव पुंसामद्वैतवासना"**

**“ஈஶ்வரானுக்³ரஹாதே³வ பும்ஸாமத்³வைதவாஸனு”**

என்றபடி ஈஶ்வர அபின்ன குருவின் அநுக்கிரகத்தினுலேதான் ஜீவர்களுக்கு அத்வைத வாஸனே யேற்படுகின்றது. ஆதலின் உபதேஷ்டாவாகிய குருவும், வித்தி யாதிஷ்டான தேவதையாகும் அஹம்பத லக்ஷ்யார்த்த பரதேவதையும், அஹம்பத வாச்சியார்த்தனுன உபாஸக முமுக்ஷுவும் குறிப்பிடப் படுகின்றனர்.

தத்பதலக்ஷ்யார்த்த நிருபாதிக காமேஶ்வர நாமக பரப்பிரஹ்மமும், பிரஹ்மா பின்ன ஆத்மாபிவியஞ்சக பிண்டாண்டரூப ஸ்ரீசக்கிரமும் ஸூசிக்கப் படுகின்றன வென்று கூறவும் வேண்டுமோ?

## அனுபந்த சதுஷ்டயம்.

எதையறியாமல், ஒரு விவேக புருஷனுக்கு, ஒரு கிரந்தத்தினிடத்தில் பிரவிருத்தி யேற்படாதோ, அதை "அநுபந்தம்" என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அவை அதிகாரி, ஸம்பந்தம் விஷயம், பிரயோஜன மென்பனவாம். இந்த அநுபந்த

சதுஷ்டயத்தையறியாமல் விவேகிக்குக் கிரந்தத்தின்கண் பிரவ்ருத்தி யேற்படாமை யின், அவற்றைப்பற்றி யீண்டு விசாரித்தல் அத்தியாவசியமேயாகும்.

(1) **அதிகாரி**: - விவேகம், வைராக்கியம், சமாதிஷட்க ஸம்பத்தி, முமுக்ஷு த்துவம் என்னும் நான்கு ஸாதனங்களும் நன்கமையப் பெற்று, குருவின அநுக்கிர கத்திற்குப் பாத்திரனுகி, அவர்பால் வேதாந்த சிரவணம் செய்து பின்னரும், எந்த ஒரு புருஷனுக்கு "**அஹம் பிரஹ்மாஸ்மி**" என்னும் அபரோக்ஷ ஸாக்ஷத்காரம் ஏற்பட வில்லையோ, அந்தமஹாபுருஷனே இந்நூலுக்கு முக்கியாதி காரி யாவன். இவன் அபானுபாதக ஆவரணத்தோடு கூடியுள்ள வனுவான்.

(2) **ஸம்பந்தம்**: - இது பலவகைப்படும். இவற்றுள்,

i கிரந்தத்திற்கும் விஷயத்திற்கும் பிரதிபாதகப் பிரதிபாத்திய ஸம்பந்தமு ளது. கிரந்தம் பிரதி பாதகம்; விஷயம் பிரதிபாத்தியம்.

ii அதிகாரிக்கும் பிரயோஜனத்திற்கும் பிராபகப் பிராப்பிய ஸம்பந்தமு ளது. பிராப்பியம் பிரயோஜனம்; பிராபகன் அதிகாரி.

(3) **விஷயம்**: - பிரகாச விமர்ச ஸாமரஸ்யாத்மக ஜீவப்பிரஹ்மைக்கிய ஞானமே இந்நூலில் பிரதிபாதிக்கப்படும் முக்கிய விஷய மாம்.

(4) **பிரயோஜனம்**: - பிரதிபந்த நிவர்த்தியின் மூலமாக ஆத்மாபின்ன பிரஹ்ம ஸாக்ஷாத்கார ஞான ஸித்தியும், அதன் வாயிலாக நிர்வி கல்பக ஸஹஜஸ்திதியின் அடைவுமே இந்த நூலின் பிரயோஜனமாகும்.

இங்ஙனம் ஒருவாறு முதல் ஶ்லோகத்தின் விசேஷவுரை கூறப்பட்டது. (1)

(**அவதாரிகை**) முதல் ஶ்லோகத்தில் விமர்சம் என்னும் சித்சக்தி அந்தர்க்கத மாயுள்ள **சுத்தப் பிரஹ்மம்** நிரூபிக்கப்பட்டது. இதனைப் **பிரகாசபிந்து** வென்று தந்த் ரங்கள் கூறும். அந்தர்க்கதமாயுள்ள சித்சக்தியாகும் விமர்ச சக்தி இரண்டாவதாகும் இந்த ஶ்லோகத்தில் நிரூபிக்கப்படுகின்றது.

**सा जयति शक्तिराद्या निजसुखमयनित्य निरुपमाकारा ।**
**भाविचराचरबीजं शिवरूपविमर्श निर्मलादर्शः ॥ २ ॥**

**ஸா ஜயதி ஶக்திராத்[3]யா நிஜஸுக[2]மயநித்ய நிருபமாகாரா ।**
**பா[4]விசராசரபீ[3]ஜம் ஶிவரூபவிமர்ஶ நிர்மலாத[3]ர்ஶ: ॥ 2 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **भाविचराचरबीजं**<br>**பா⁴விசராசரபீ³ஜம்** | = | இனியுண்டாகப்போகும் சராசரவடிவ ஸ்கலவுலகங்கட்கும், விருக்ஷத்திற்கு விதையைப்போன்று காரணமானதும், |
| **शिवरूपविमर्श निर्मलादर्शः**<br>**ஶிவரூபவிமர்ஶ நிர்மலாத³ர்ஶ:** | = | சிவஸ்வரூபமான "அஹம்" என்பதன் உண்மையான ஸ்வாம்ச விமர்சத்திற்கு ஸ்வச்சமான கண்ணுடி போன்றதும், |
| **निजसुखमय**<br>**நிஜஸுக²மய** | = | ஸ்வபாவமான ஆநந்த கனமானதும், |
| **नित्य**<br>**நித்ய** | = | முக்காலத்திலும் அழிவில்லாததும், |
| **निरुपमाकारा**<br>**நிருபமாகாரா** | = | உவமையற்ற ஸ்வரூபமுடையதுமான, |
| **सा आद्या शक्तिः**<br>**ஸா ஆத்³யா ஶக்தி:** | = | பிரகாசாந்தர்க்கதமாயுள்ளதென்று முன் கூறப்பட்ட ஆத்யாசக்தியாகும் அந்த விமர்சவடிவ சித்சக்தியானது, |
| **जयति**<br>**ஜயதி** | = | ஸர்வோத்க்ருஷ்டமாய் விளங்குகின்றது. |

(**விரிவுரை**) இந்த ஶ்லோகம் **விமர்சபிந்துவை** நிரூபிக்கின்றது. சித்பிந்து, ஸம்வித்பிந்து, விமர்சபிந்துவென்பன பரியாய நாமங்களாகும். விமர்சபிந்துவென்பது, பரப்பிரஹ்மத்தின் நாமாந்தரமாயிருக்கின்றது. பரையென்னும் சித்சக்தி விஜ்ரும்பித்துள்ள சுத்தப் பிரஹ்மத்திற்குப் பரப்பிரஹ்மமென்றுபெயர்.

**पराव्यापकलक्षणं பராவ்யாபகலக்ஷணம்** - ஆத்மாபின்ன பிரஹ்மஸ்வரூப விசார வடிவ விமர்சமே பராவியாபகமாம். விமர்சரூப பரையின் வியாபகலக்ஷணம் ஸ்ரீஸூதஸம்ஹிதையில் இங்ஙனம் கூறப்படுகின்றது.

**शास्त्राचार्योपदेशेन तर्कैः शास्त्रानुसारिभिः ।**
**सर्वसाक्षितयात्मानं सम्यङ्किश्चित्य सुस्थिरः ॥**

**स्वात्मनोऽन्यतया भान्तं समस्तमविशेषतः ।**
**स्वात्ममात्रतया बुद्ध्वा पुनः स्वात्मानमद्वयम् ॥**

**शुद्धं ब्रह्मेति निश्चित्य स्वयं स्वानुभवेन च ।**
**निश्चयं च स्वचिन्मात्रे विलाप्याविक्रियेऽद्वये ॥**

**विलापनं च चिद्रूपं बुद्ध्वा केवलरूपतः ।**
**स्वयं तिष्ठेदयं साक्षात् ब्रह्मवित्प्रवरो मुनिः ॥**

ஈஶ்வரனால் சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தில் துக்கமென்பதே கிடையாது. துக்கமானது அநுகூலமாயுள்ள பிரியவஸ்து ஸித்திக்காததனாலும், பிரதிகூலமாயுள்ள அப்பிரியவஸ்துவின் ஸித்தியாலுமுண்டாவதாகும். அநுகூல, பிரதிகூலங்களாகும் பிரியாப்பிரியங்கள் ஜீவனால் கற்பிக்கப்பட்டவையே யன்றி, ஈஶ்வர சிருஷ்டமன்று. ஒரே ஸ்திரீ வியக்தியானது காமுகனுக்குப் பிரியவஸ்துவாகவும், வைராக்கிய புருஷனுக்கு அப்பிரிய வஸ்துவாகவும் இருக்கின்றது. இங்ஙனமே இந்தப் பிரபஞ்சமும் தத்துவஞானிக்கு ஆநந்தமாகவும், பாமர அக்ஞானிக்குத் துக்கமாகவும் விளங்குகின்றது. அன்றியும், ஈஶ்வர சிருஷ்டமான இந்தப் பிரபஞ்சம் இல்லாவிடில், தீவிரதர முமுக்ஷுக்களுக்கு அத்வைதஞானம் உண்டாகவே உண்டாகாது. ஜீவகற்பித துவைதத்தின் மித்யாத்துவ நிச்சயமே யன்றோ அத்வைத ஞானத்தின் முக்கியஸாதனம்?

**अबाधकं साधकं च द्वैतमीश्वरनिर्मितम् ।**
**अपनेतुमशक्यं चेदास्तां तद्विष्यते कुतः ॥**

**அபா³த⁴கம் ஸாத⁴கம் ச த்³வைதமீஸ்வரநிர்மிதம் ।**
**அபனேதுமஶக்யம் சேதா³ஸ்தாம் தத்³விஷ்யதே குத: ॥**

(**தாத்பர்யம்**) ஈஶ்வரனாலுண்டாக்கப்பட்ட பிரபஞ்சம் பாதமற்றதும், ஸாதகமானதுமாகும்; அதைத் தள்ளுதற்கும் முடியாது. ஆகையால் அது (பிரபஞ்சம்) நன்றாய் இருக்கட்டும். ஏன் அது துவேஷிக்கப்படல் வேண்டும்?

அத்வைத ஞானோத்பத்திக்குச் சாதனமாயும், பிரஹ்மஸ்வரூபத்தின் அபிவியஞ்சகமாயுமுள்ள இந்தப் பிரபஞ்சம் முமுக்ஷுவுக்குத் தள்ளத்தக்கதல்ல. ஆதலின் முமுக்ஷுவிற்கு ஸாதகமாயுள்ள ஜகத்தின் காரணனாகும் பரமேஶ்வரன் ஸ்துதிக்கத் தக்கவனேயாவன்.

ஸகல கற்பனைகளின் நாசவடிவ அதிஷ்டானஸ்வரூப ஸந்மாத்ரமாய் விளங்குவதே **ஜயதி** யென்பதன் பாவார்த்தமாம். **(5)**

(**அவதாரிகை**) முன் ஶ்லோகத்தில் கூறப்பட்ட சிவசக்திகளின் மிதுனபிண்ட வடிவ மாயாவிசிஷ்ட பரமேஶ்வரன் இந்த ஶ்லோகத்தில் சுக்கில ரக்த பிந்துக்களின் ஸமஷ்டி வடிவமாக வர்ணிக்கப்படுகிறார்.

**सितशोणबिन्दुयुगलं विविक्तशिवशक्तिसंकुचत्प्रसरम् ।**
**वागर्थसृष्टिहेतुः परस्परानुप्रविष्टविस्पष्टम् ॥ ६ ॥**

**ஸிதஶோணபி³ந்து³யுக³லம் விவிக்தஶிவஶக்திஸங்குசத்ப்ரஸரம் ।**
**வாக³ர்த²ஸ்ருஷ்டிஹேது: பரஸ்பரானுப்ரவிஷ்டவிஸ்பஷ்டம் ॥ 6 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **विविक्तशिवशक्तिसंकुचत्प्रसरम्** **விவிக்தஶிவஶக்திஸங்குசத்ப்ரஸரம்** | = | பரஸ்பரம் ரமிக்கும் ஸ்வபாவமுள்ள சிவசக்திகளின் ஸங்கோசவிகாஸ ஸ்வரூபமானதும், |
| **वागर्थसृष्टिहेतुः** **வாக³ர்த²ஸ்ருஷ்டிஹேதுः** | = | பராபஶ்யந்தீ முதலிய சப்தப் பிரபஞ்சத்திற் கும், சிவாதி பூமியந்தமான முப்பத்தாறு தத்துவவடிவ அர்த்தப் பிரபஞ்சத்திற்கும் காரணமானதும், |
| **परस्परानुप्रविष्टविस्पष्टम्** **பரஸ்பரானுப்ரவிஷ்டவிஸ்பஷ்டம்** | = | சிவசக்திகள் ஒன்றில் ஒன்று அநுப்பிரவேசம் செய்து சிவம் வேருகவும், சக்தி வேருகவும், விளக்கமாய்த் தோன்று வதாயுமுள்ள, சுக்கிலம், ரக்தம் என்னும் இரண்டு பிந்துக்களின் துவந்துவமானது சிறப்பாய் விளங்குகின்றது. |

**(விரிவுரை)** முன் நான்காவது ஶ்லோகத்தில் கூறப்பட்ட மஹாபிந்துவே இந்தஶ்லோகத்திலும் அடுத்த ஏழாவது ஶ்லோகத்திலும் ரக்த சுக்கில மிஶ்ர பிந்துக் களின் ஸ்வரூப காமகஜலயாக ஸ்துதிக்கப்படுகின்றது. மாயையில் பிரதிபலித்த சேதனமே மஹாபிந்து வாகுமென்று முன்னர் கூறப்பட்டுள்ளது.

**विविक्तशिवशक्तिसङ्कुचत्प्रसरं விவிக்தஶிவஶக்திஸங்குசத்ப்ரஸரம்** - சேதனம் மாயையிலும், மாயை சேதனத்திலும் விஹரிப்பதில் தத்பரமாய், ஒன்று ஸங்கோசத்தையும், மற்றென்று விகாஸத்தையும் பெற்றது; என்றல், சேதனபாகம் மாயையில் ஒடுங்கி மாயை விகாஸத்தையடைந்தது ஒன்று; இந்த நிஜல அவித்யாப் பிரபஞ்ச சிருஷ்டிக்குக் காரணமானது. மாயை சேதனத்தில் ஒடுங்கிச் சேதனம் விகாஸத்தையடைவது மற்றென்று: இது வித்தியாப்பிரபஞ்ச சிருஷ்டிக்குக் காரண மானது.

## சேதனமாயைகளின் ஸங்கோச விகாஸங்களின் விமர்சமாவது: -

அத்வயம், நிஷ்பிரபஞ்சம் என்பனவாதிகள் சேதனத்தின் லக்ஷணங்களாகும். துவைதம், ஸப்பிரபஞ்சம் என்பனவாதிகள் மாயை (சக்தி) யின் லக்ஷணங்களாகும். சேதன மாயைகளின் அந்நியோன்ய கல்பித ஸம்பந்தத்தால் ஒன்றிலொன்று ரமிக்கும் தன்மையைப் பெற்றது. இதனல் சேதன லக்ஷணங்களாகும் அத்வய நிஷ் பிராபஞ்சியங்கள் மாயையால் ஆவரிக்கப்பட்டு, ஸங்கோச பாவத்தை யடைந்து, ஈக்ஷணம், காமம், விசிகீர்ஷை முதலியன விகஸித்துத் தோன்றின. இவை துவைத பிராபஞ்சிக சிருஷ்டிக்கு இன்றியமையாதவை.

இங்ஙனமே, சேதனம் மாயையில் அநுப்பிரவேசம் செய்து, அநிர்வசனீயமா யும், ஜடமாயுமுள்ள மாயாலக்ஷணங்களை மறைத்தொழித்து, ஸத்தையையும், விளக்கத்தையும் தந்தது. ஸத்தும், விளக்கமும் சேதனலக்ஷணங்களாகும்.

இங்ஙனம், சேதனம் மாயோபாதியால் ஈக்ஷணாதிகளையும், மாயை சேதனத் தின் ஆஸ்ரயத்தால் அஸ்தி (இருப்பு), பாதி (விளக்கங்) களையும் பெற்று, ஸங்கோச விகாஸங்களைப்பெற்றன. இதனுல் கற்பித மாயைக்கு இருப்பும், நிஷ்பிரபஞ்சிய அஸங்க சேதனத்திற்குக் காம ஈக்ஷணாதிகளும், சிருஷ்டியாதிகளும் சித்தித்தன வென்றறியத்தக்கது.

சேதனம் சுக்கிலபிந்துவென்றும், மாயை ரக்தபிந்து வென்றும் முன்னர் கூறப்பட்டது. ரக்தபிந்துவென்னும் மாயையின் ஸாபேக்ஷத்தால் சேதனத்திற்குச் சுக்கில பிந்துத்தன்மை ஏற்பட்டதென்பது ரஹஸ்யமாகும்.

**परस्परानुप्रविष्टविस्पष्टम् பரஸ்பரானுப்ரவிஷ்டவிஸ்பஷ்டம்** - ரக்த பிந்துவில் சுக்கிலபிந்து அநுப்பிரவேசம் செய்து, அதனுல் ரக்த பிந்துவின் ஸபஷ்டத் தன்மையும், ரக்தபிந்துவின் ஆபிமுக்கியத்தன்மையாலும், உபாதித்தன்மையாலும் சுக்கில பிந்துவின் ஸ்பஷ்டத்தன்மையும் ஏற்பட்டன வென்றறிதல் அவசியம்.

**वागर्थसृष्टिहेतुः வாக³ர்த²ஸ்ருஷ்டிஹேது**ঃ - சப்தார்த்தங்களின் சிருஷ்டிக்கு, முறையே, ரக்த பிந்துவும், சுக்கில பிந்துவும் காரணங்களாகும்.

பரா, பஶ்யந்தீ, மத்தியமை, வைகரியென்பன வாக்குகளின் பேதங்களாகும். இவற்றின் ஸமஷ்டியே சப்தப்பிரபஞ்சமாம். இதுதான் **நாமப்பகுதி**யெனப்படும். இதற்குக் காரணம் ரக்தபிந்து.

பிரிதிவி முதலிய முப்பத்தாறு தத்துவங்களின் வடிவமாய் இருப்பது அர்த்தப் பிரபஞ்சமாகும். இதுதான் **ரூபப்பகுதி**யெனப்படுவது. இதற்குக் காரணம் சுக்கில பிந்து.

ரக்தம், சுக்கிலம் என்னும் இரண்டு பிந்துக்களிலும் சேதனம் அந்தர்யாமியாய் இருப்பதால் நாமரூபங்கள் இரண்டும், இருப்பு (அஸ்தி), விளக்கங் (பாதி) களோடு கூடியிருக்கின்றன. சேதனத்தில் பிரகாச விமர்சங்களின் ஸாமரஸ்யம், இருப்பத னுல் நாமரூபங்களிலும் ஆநந்தம் பிரியம்) தோன்றுகின்றது. எனவே, ரக்த சுக்கில பிந்துக்களின் காரியமாகிய நாமரூபப் பிரபஞ்சத்திற்கு அஸ்தி, பாதி, பிரியங்கள் சேதன அதிஷ்டானத்தினுல் சித்தித்தமை நன்குணரத்தக்கது.

சுக்கிலபிந்துவிலுள்ள சேதனும்சத்தில் பிரகாசாம்சம் அதிகமாகவும், ரக்தபிந்து விலுள்ள சேதனும்சத்தில் விமர்சாம்சம் அதிகமாகவும் இருக்கும்.

சுக்கில பிந்துவிற்கு சித்பிந்துவென்றும் ரக்த பிந்துவிற்கு அசித் பிந்து வென்றும், நாமாந்தரங்கள் சாஸ்திரங்களில் விவகரிக்கப்படுகின்றன.

சுக்கில ரக்த பிந்துக்களின் ஸாமரஸ்யத்திற்கு **சிதசின்மிஶ்ர** பிந்துவென்று பெயர். இது ஸ்தூலமாகும். சித்பிந்து பரமும், அசித்பிந்து ஸூக்ஷ்மமுமாகும்.

அசித் பிந்து நாதமாகவும் சாஸ்திரங்களில் விவஹரிக்கப்படுகின்றன.

இங்ஙனம் அவ்வியக்தமான மஹாபிந்துவானது சிவசக்திகளாகவும், சிதசித் பிந்துக்களாகவும், சுக்கில ரக்தபிந்துக்களாகவும், வியக்கப்பட்டமை இதில் கூறப் பட்டது. **(6)**

**(அவதாரிகை)** இந்த சுலோகத்தில் மிஶ்ர (சிதசின்மிஶ்ர) பிந்து நிரூபிக்கப்படு கின்றது.

**विन्दुरहङ्कारात्मा रविरेतन्मिथुनसमरसाकारः ।**
**कामः कमनीयतया कला च दहनेन्दुविग्रहौ बिन्दू ॥ ७ ॥**

**விந்து$^{3}$ரஹங்காராத்மா ரவிரேதன்மிது$^{2}$னஸமரஸாகாரः ।**
**காமः கமனீயதயா கலா ச த$^{3}$ஹனேந்து$^{3}$விக்$^{3}$ரஹௌ பி$^{3}$ந்தூ$^{3}$ ॥ 7 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **विन्दुः** விந்து$^{3}$ | = | முற்கூறிய ரக்த சுக்கிலபிந்துக்களின் சேர்க்கையால் ஏற்பட்ட மிஸ்ரபிந்துவானது, |
| **अहङ्कारात्मा** அஹங்காராத்மா | = | அகார ஹகாரங்களேயே ஸ்வரூபமாகவுடைய பிரகாசவிமர்சாத்மகமான, |
| **एतत्** ஏதத் | = | பரப்பிரஹ்மம், சக்தி இவைகளின், |
| **मिथुनसमरसाकारः** மிது$^{2}$னஸமரஸாகாரः | = | ஐக்கியவடிவ பராஹந்தாஸ்வரூபத்தின் பிரதிபிம்பமானதும், |
| **दहनेन्दुविग्रहौ** த$^{3}$ஹனேந்து$^{3}$விக்$^{3}$ரஹௌ | = | அக்கினீஷோமீய ஸ்வரூபமான, |
| **विन्दुः** விந்து$^{3}$ | = | இரண்டு பிந்துக்களின் ஸமஷ்டி வடிவமானதும், |
| **रविः** ரவிः | = | சூரியன் என்னும் பெயரையுடையதும், |
| **कमनीयतया** கமனீயதயா | = | ரமணீயமாயுள்ள காரணத்தால், |

**काम: कला च** = தத்துவஞானிகளாலும் விரும்பக்கூடிய காமகலை
**காமः கலா ச** யென்னும் நாமாந்தரமுடையதுமாய் விளங்குகின்றது.

**(விரிவுரை)** முன் ஶ்லோகத்தில் ஸோம அக்கினிகளென்னும் சுக்கில பிந்துவும், ரக்தபிந்துவும் நிரூபிக்கப்பட்டு, இந்த ஶ்லோகத்தில் அவற்றின் ஸாமரஸ்யவடிவ மிஶ்ர பிந்து நிரூபிக்கப்படுகின்றது. மிஶ்ரபிந்துவிற்கு ஸூர்ய பிந்துவென்னும் மற்றொரு பெயருண்டு. இது த்ரிபிந்து ஸ்வரூபமாய் இருத்தலின் காமகலாஸ்வரூபம் இதற்கு ஏற்படுகின்றது. இது அபராகாமகலையாகும். இதுவே அவித்யாப்பிரபஞ்ச காரணமாகும்.



முன் ஆறுவது ஶ்லோகத்தில் ஸோம, அக்கினி பிந்துக்களையும், இந்த ஏழாவது ஶ்லோகத்தில் ஸூர்ய பிந்துவையும் கூறியதால் திரிபிந்து ஸ்வரூப **காமகலை** கூறப்பட்டதென்பது உணரத்தக்கது. காமகலையென்றால் பராபஶ்யந்தீ முதலிய லௌகிக சப்தாத்மகமாயும், பாஞ்சபௌதிக அர்த்தாத்மகமாயும், விளங்கும் அவித்தியாப் பிரபஞ்சத்திற்கும், மஹாவாக்யரூப சப்தாத்மகமாகவும், கூடஸ்த பிரஹ்மாத்மக பாரமார்த்திகமாகவும் விளங்கும் வித்தியாப் பிரபஞ்சத்திற்கும் **அபின்ன நிமித்தோபாதான விவர்த்த காரணமாயுள்ள பரமேஶ்வர ஸ்வரூப மேயாகு மென்பது** இது காறும் கூறப்பட்ட ஏழுஸ்லோகங்களாலேற்படுகின்றது.

**बिन्दुरहङ्कारात्मा பி³ந்து³ரஹங்காராத்மா** – அஹங்காரவடிவ மிஶ்ரபிந்து. இந்த அஹந்தாஸ்வரூபம் அபரா காமகலை யெனப்படும். இது இரண்டாவது அஹங் காரமாகும்.

**सर्वस्माद्व्यतिरिक्तोऽहं वालाग्रादप्यहं तनुः ।**
**इति संविश्च या ब्रह्मन् द्वितीयाऽहंकृतिः शुभा ।**
**मोक्षायैषा न बन्धाय जीवन्मुक्तस्य विद्यते ॥**

**ஸர்வஸ்மாத்³வ்யதிரிக்தோ(அ)ஹம் வாலாக்³ராத³ப்யஹம் தனு: ।**
**இதி ஸம்விஶ்ச யா ப்³ரஹ்மன் த்³விதீயா(அ)ஹங்க்ருதி: ஶுபா⁴ ।**
**மோக்ஷாயைஷா ந ப³ந்தா⁴ய ஜீவன்முக்தஸ்ய வித்³யதே ॥**

என்னும் மஹோபநிஷத்தின் பிரமாணத்தின்படி இரண்டாவது அஹங்காரத் தின் ஸ்வரூபம் நன்கு விளங்குகின்றது. -

**रविः - सितशोणविन्दुसमरसीभूतो मिश्रबिन्दुः**

**ரவி: - ஸிதஶோணவிந்து³ஸமரஸீபூ⁴தோ மிஶ்ரபி³ந்து³:**

சுக்கில ரக்த பிந்துக்களென்னும் சந்திர அக்கினி பிந்துக்களின் ஸாமரஸ்யமே மிஶ்ரபிந்துவாகும் **ஸூர்யனும்**.

**उद्यन्तं वादित्यमग्निरनुसमारोहति । अग्निं वादित्यः सायं प्रविशति । अमा सह सूर्याचन्द्रमसावस्यां तिथौ तिष्ठतः इत्यमाशब्दव्युत्पत्त्या चन्द्रसूर्ययोः प्रवेशनिर्गमने प्रसिद्धे । तस्माद्रविः मिश्रविन्दुरेव ॥**

**உத்³யந்தம் வாதி³த்யமக்³நிரனுஸமாரோஹதி । அக்³னிம் வாதி³த்ய: ஸாயம் ப்ரவிஶதி । அமா ஸஹ ஸூர்யாசந்த்³ரமஸாவஸ்யாம் திதௌ² திஷ்ட²த: இத்யமாஶப்³த³வ்யுத்பத்த்யா சந்த்³ரஸூர்யயோ: ப்ரவேஶநிர்க³மனே ப்ரஸித்³தே⁴ । தஸ்மாத்³ரவி: மிஶ்ரவிந்து³ரேவ ॥**

மிஶ்ரபிந்துவிற்குக் காமனென்னும் பெயர், **सोऽकामयत ஸோ(அ)காமயத** என்னும் பிரமாணத்தின்படி இந்த ஜகத்தைச் சிருஷ்டிக்கும் இச்சையுண்டானமை

யால் ஏற்பட்டது. இந்த மிஶ்ரபிந்துவே காரியஸ்வரூபப் பிரபஞ்சத்திற்குக் காரண மும், ஸ்வரூபமுமாகும். காரியகாரணங்களுக்குத் தம்முள் பேதமின்மையால். ஸர்வப்பிரபஞ்சமும் ஜீவனிடத்தில் தோன்றுகின்றமையால் **ஜீவனே காமனென்னும் மிஸ்ரபிந்துவாகும்**. ரக்த சுக்கில பிந்துக்களென்னும் மாதா பிதாக் களின் ஸாமரஸ்யத்தால் சோணித சுக்கிலங்களின் ஸாமரஸ்ய பிண்டமாகும் **ஸந்தானம்** ஏற்படுகின்றது. இந்த ஸந்தானமே காமனென்னும் ஜீவன், அல்லது **சிதா பாஸனாவன்**. **(7)**

(**அவதாரிகை**) இங்ஙனம், நூலாசிரியர் முதல் சுலோகத்தினுல் மஹாப்பிரகா ஸூரஸ்வரூப சுத்தப் பிரஹ்மத்தையும், இரண்டாவது ஸ்லோகத்தினுல் விமர்ச ஸ்வரூப ஆதிசக்தியையும், மூன்ருவதால் ஆதிசக்தியால் வியாபிக்கப்பட்ட பரப் பிரஹ்மத்தையும், நான்காவது ஶ்லோகத்தால் மஹாபிந்துவென்னும் மாயாவிசிஷ்ட சேதன காரணேஶ்வரனையும், ஐந்தாவதால் அவ்வியக்த காமகலாஸ்வரூபத்தையும், ஆறுவதாலும், ஏழாவதாலும், வியக்த காமகலையாகும் சுக்கில, ரக்த, மிச்ரபிந்துக்க ளென்னும் அக்னீஷோமீய ஸ்வரூபத்தையும் நிரூபித்து, இந்த எட்டாவது ஶ்லோகத்தால் **காமகலாஸ்வரூபத்தை** யறிவதனாலுண்டாகும் பயனை நிரூபிக்கின் றனர்.

**इति कामकला विद्यादेवीचक्रक्रमात्मिका सेयम् ।**
**विदिता येन स मुक्तो भवति महात्रिपुरसुन्दरीरूपः ॥ ८ ॥**

**இதி காமகலா வித்³யாதே³வீசக்ரக்ரமாத்மிகா ஸேயம் ।**
**விதி³தா யேன ஸ முக்தோ ப⁴வதி மஹாத்ரிபுரஸுந்த³ரீரூப꞉ ॥ 8 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **विद्या** வித்³யா | = | பராஹந்தாஸ்வரூப பிரஹ்மவித்தை அல்லது அஹம் என்னும் ஆத்ம மந்த்ரம், |
| **देवी** தே³வீ | = | விமர்சஸ்வரூப சித்சக்தி, |
| **चक्र** சக்ர | = | பிந்து - திரிகோணமென்னும் சக்கிரம் இவைகளின், |
| **क्रमात्मिका** க்ரமாத்மிகா | = | மந்த்ர, தேவதா, சக்கிராத்மகமான, |
| **सा इयं** ஸா இயம் | = | இது காறும் விமர்சிக்கப்பட்ட பரதேவதை, |
| **इति** இதி | = | பிரகாச விமர்சாத்மக சிவசக்திகளின் ஐக்கிய ஸ்வரூப காமகலையாக, |
| **येन** யேன | = | எந்த மஹாபுருஷனுல், |

| | | |
|---|---|---|
| **विदिता** | = | அறியப்படுமோ, |
| **விதி³தா** | | |
| **सः** | = | அந்த மஹாபுருஷன், |
| **ஸ:** | | |
| **महात्रिपुरसुन्दरीरूपः** | = | சிவசக்தியைக்கிய சித்சக்தியின் ஸாயுஜ்யரூப |
| **மஹாத்ரிபுரஸுந்த³ரீரூப:** | | மோக்ஷத்தைப் பெற்று, |
| **मुक्तः भवति** | = | ஜீவன்முக்தனுய் விளங்குகின்றனன். |
| **முக்த: ப⁴வதி** | | |

(**விசேஷவுரை**) ஸ்ரீகாமகலா விலாஸமென்னும் இந்த கிரந்தத்தின் துரீய பாதமாகும் இதில், **ब्रह्मवाहं ப்³ரஹ்மவாஹம்** என்னும் **மஹாவித்தையும்**, ஸச்சிதாநந்தாத்வய அஸங்க சித்சக்தியென்னும் **பரதேவதையும்**, பிரகாச விமர்ச ஸாமரஸ்ய ஸம்வித்ஸ்வரூபம் பிந்துவாகவும், ரக்த, சுக்கில, மிச்ர பிந்துக்கள் திரிகோணமாகவும் ஏற்பட்டுள்ளதனுல் **சக்கிர ஸ்வரூபமும்** இலைமறை காய்போல் விளங்குகின்றன.

இங்ஙனம் விளங்கும் மந்த்ர, தேவதா சக்கிரங்களின் ஐக்கியஸ்வரூபத்தைச் சந்தேஹ விபரீதங்களற நன்குணர்ந்த பாக்கியசாலிகள் திரிபுரஸுந்தரீ ஸ்வரூபமா கவே ஆய்விடுகின்றனர். அதனுல் நித்தியாநந்த நிலையாகும் **மோக்ஷம்** ஸித்திக்கின் றது.

**परं धाम त्रैपुरं चाविशन्ति ॥**
**त्रिपुरसुन्दरी - सैव पुरत्रयं शरीरत्रयं व्याप्य बहिरन्तरवभासयन्ती**
**देशकालवस्त्वन्तरासङ्गान्महात्रिपुरसुन्दरी वै प्रत्यक्चितिः ॥**

**பரம் தா⁴ம த்ரைபுரம் சாவிஶந்தி ॥**
**த்ரிபுரஸுந்த³ரீ - ஸைவ புரத்ரயம் ஶரீரத்ரயம் வ்யாப்ய ப³ஹிரந்தரவபா⁴ஸயந்தீ**
**தே³ஶகாலவஸ்த்வந்தராஸங்கா³ன்மஹாத்ரிபுரஸுந்த³ரீ வை ப்ரத்யக்சிதி: ॥**

## ஆத்மஸ்வரூப பிரஹ்மாபின்னமே த்ரிபுரை.

**ध्यातृध्यानध्येयेभ्यः पुरा**
**ब्रह्मविष्णुरुद्रेभ्यः पुरा** } **त्रिपुरा**
**इच्छाज्ञानक्रियाभ्यः पुरा**

**ब्रह्मविद्ब्रह्मैव भवति । यो वेद निहितं गुहायां परमे व्योमन् । सोऽश्नुते सर्वान् कामान् सह ॥**

**த்⁴யாத்ருத்⁴யானத்⁴யேயேப்⁴ய: புரா ।**
**ப்³ரஹ்மவிஷ்ணுருத்³ரேப்⁴ய: புரா** } **த்ரிபுரா**
**இச்சா²ஜ்ஞானக்ரியாப்⁴ய: புரா**

**ப்³ரஹ்மவித்³ப்³ரஹ்மைவ ப⁴வதி । யோ வேத³ நிஹிதம் கு³ஹாயாம் பரமே வ்யோமன் । ஸோ(அ)ஸ்னுதே ஸர்வான் காமான் ஸஹ ॥**

என்னும் பிரமாணங்களின்படி, அஹம்பத லக்ஷ்ய மஹாத்திரிபுரஸுந்தரியை எவன் பிரஹ்மாபின்னமாக அறிகின்றுனே, அவன் பிரஹ்மஸ்வரூப மஹாத்திரிபுர ஸுந்தரியே யாகின்றுன்.

**ஸ்ரீகாமகலா விலாஸம்**
**துரீய பாதம்**
**முற்றிற்று.**

---

# ஸ்ரீ காமகலா விலாஸம்.

## ஆநந்தோல்லாஸம்

### அவித்யாபாதம்.

(**அவதாரிகை**) முதலாவதாகிய துரீய பாதத்தில் வித்தியாப்பிரபஞ்ச காரணமாகும் பரா காமகலேயும், அவித்தியாப் பிரபஞ்ச காரணமாகும் அபரா காமகலேயாகும் மஹாபிந்துவும் நிரூபிக்கப்பட்டன. இந்த அவித்தியா பாதத்தில் சப்தார்த்தவடிவ அவித்தியா பிரபஞ்ச சிருஷ்டி நிரூபிக்கப்படுகின்றது. அவற்றுள் இந்தஸ்லோகம் சப்தப்பிரபஞ்சோத்பத்தியைக் கூறுகின்றது.

**स्फुटितादरुणाद्बिन्दोर्नादब्रह्माङ्कुरो खो व्यक्तः ।**
**तस्माद्गगनसमीरणदहनोदकभूमिवर्णसंभूतिः ॥ ९ ॥**

**ஸ்பு²டிதாத³ருணாத்³விந்தோ³னதி³ப்³ரஹ்மாங்குரோ கோ² வ்யக்த꞉ ।**
**தஸ்மாத்³ப⁴க³னஸமீரணத³ஹனோத³கபூ⁴மிவர்ணஸம்பூ⁴தி꞉ ॥ 9 ॥**

(**பதவுரை**)

**स्फुटितात्** **ஸ்பு²டிதாத்** = நன்கு விகாஸத்தை யடைந்த,

**अरुणाद्बिन्दो** **அருணாத்³விந்தோ³** = ரக்தபிந்துவிலிருந்து,

**नादब्रह्माङ्कुरः** **நதி³ப்³ரஹ்மாங்குர꞉** = நாதமென்னும் பிரஹ்மத்தையே முளேயாகவுடைய,

**खः** **க²꞉** = சப்தப் பிரஹ்மமானது,

**व्यक्तः** **வ்யக்த꞉** = ஆவிர்ப்பவித்தது,

**तस्मात्** **தஸ்மாத்** = அந்த சப்தப் பிரஹ்மத்திலிருந்து,

**गगन, समीरण, दहन, उदक, भूमिवर्ण** **க³க³ன, ஸமீரண, த³ஹன, உத³க, பூ⁴மிவர்ண** = ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பூமியென்னும் பஞ்சபூதங்களினுடைய பீஜங்களின் வடிவ மாத்ருகைகளின்,

**संभूतिः** **ஸம்பூ⁴தி꞉** = உத்பத்தி ஏற்பட்டது.

(**விசேஷார்த்தம்**) பிந்துவிலிருந்து நாதமும், நாதத்திலிருந்து பீஜமும் உண்டாயினவென்பது ஸூதஸம்ஹிதை - சிவமாஹாத்மிய கண்டம், சக்தி பூஜாத்தியாய

த்தில் நன்கு விளக்கப்பட்டுள்ளது. மாத்ருகைகள் நாற்பத்தொன்பதென்பது ஒரு பக்ஷம்; ஐம்பதென்பது மற்றொரு பக்ஷம்; ஐம்பத்தொன்றென்பது வேறொரு பக்ஷம். இந்த மூன்று பக்ஷங்களும் சாஸ்திரீயமே.

## பஞ்சபூத பீஜங்களாவன

ஹ - ஆகாச பீஜம்; ய - வாயு பீஜம்; ர - அக்கினி பீஜம்; வ - ஜல பீஜம்; ல- பிரிதிவீ பீஜம். அகாராதிஹகாராந்த ஸர்வ மாத்ருகைகளும் பஞ்ச பூதங்களின் ஸமுதாய வடிவமேயாகும்; ஆயினும், சிறப்பு லக்ஷணமாய் ஐந்து பீஜங்கள் மேலே கூறப்பட்டன. இவை சப்தப் பிரஹ்மத்திலிருந்து தோன்றியவை.

**सच्चिदानन्दविभवात् सकलात्परमेश्वरात् ।**
**आसीच्छक्तिस्ततो नादो नादाद्बिन्दुसमुद्भवः ॥**
**पराशक्तिमयः साक्षात् त्रिधाऽसौ भिद्यते पुनः ।**
**बिन्दुर्नादो वीजमिति तस्य भेदाः समीरिताः ॥**
**भिद्यमानात्पराद्बिन्दोरव्यक्तात्मा रवोऽभवत् ।**
**शब्दब्रह्मेति तं प्राहुः सर्वागमविशारदाः ॥**
**पञ्चभूतात्मकं सर्वं चराचरमिदं जगत् ।**

**ஸச்சிதா³னந்த³விப⁴வாத் ஸகலாத்பரமேஸ்வராத் ।**
**ஆஸீச்ச²த்திஸ்ததோ நாதோ³ நாதா³த்³விந்து³ஸமுத்³ப⁴வः ॥**
**பராஶக்திமயः ஸாக்ஷாத் த்ரிதா⁴(அ)ஸௌ பி⁴த்³யதே புனः ।**
**பி³ந்து³ர்நாதோ³ வீஜமிதி தஸ்ய பே⁴தா³ः ஸமீரிதாः ॥**
**பி⁴த்³யமானாத்பராத்³விந்தோ³ரவ்யக்தாத்மா ரவோ(அ)ப⁴வத் ।**
**ஶப்³த³ப்³ரஹ்மேதி தம் ப்ராஹுः ஸர்வாக³மவிஶாரதா³ः ॥**
**பஶ்சபூ⁴தாத்மகம் ஸர்வம் சராசரமித³ம் ஜக³த் ।**

என்னும் பிரமாணத்தின்படி, பரமேஸ்வர விபவமான ஸச்சிதாநந்தத்தினின்றும் மாயாசக்தி தோன்றி, அதினின்றும் நாதமும், அதனின்று பிந்துவும் தோன்றின. நாதபிந்துஸ்வரூப பராசக்தியினின்றும், மறுபடியும், பிந்துநாத பீஜங்கள் தோன்றின. பின்னர், அப்பிந்துவிலிருந்து அவ்வியக்தமாயுள்ள ஒரு சப்தம் தோன்றிற்று. இந்த அவ்யக்தமாயுள்ள சப்தந்தான் **சப்தப்பிரஹ்ம**மென்று கூறப்படுவது. இதனின்றேதான் பாஞ்ச பௌதிக பீஜங்கள் தோன்றின. சராசராத்மகமாய் விளங்கும் இந்த ஜகத்தானது பாஞ்சபௌதிக பீஜங்களின்வடிவ சப்தப் பிரஹ்மவடிவமேயாகும்.

## சப்தப்பிரஹ்மமே ஜகத்தின் உபாதான காரணம்.

**स रवः श्रुतिसंपन्नैः शब्दत्रह्मेति गीयते ।**
**स एव शब्दब्रह्मात्मको रवः जगदुपादानं बिन्दुतादात्म्येन अभिव्यज्यते ॥**

**ஸ ரவ: ஶ்ருதிஸம்பன்ஜ்ஞ: ஶப்³த³த்ரஹ்மேதி கீ³யதே ।**
**ஸ ஏவ ஶப்³த³ப்³ரஹ்மாத்மகோ ரவ: ஜக³து³பாதா³னம் பி³ந்து³தாதா³த்ம்யேன அபி⁴வ்யஜ்யதே ॥**

என்றபடி, சப்தப் பிரஹ்மந்தான் ஜகத்திற்கு உபாதான காரணமாய் இருக்கின்றது. இதுதான் **பராவாக்** என்பது. பஶ்யந்தீ முதலிய மற்றவாக்குகள் மூன்றும் இதனின்றும் தோன்றியவை. பரா பஶ்யந்தீ முதலிய நான்கு வாக்குகளின் விமர்சம், இனி ஆநந்த பாத்த்தில் **"या सान्तरोहरूपा"** **"யா ஸாந்தரோஹரூபா"** என்னும் சுலோகத்தின் உரையில் நன்கு செய்யப்படும். வைகரீ வாக்கின் ஸ்வரூபமே மாத்ருகைகள். மாத்ருகைகள் ஸ்வரங்களென்றும், வியஞ்சனங்களென்றும் இரண்டு வகைப்படும். இந்த மாத்ருகைகளேதாம் ஸர்வ **அர்த்தப் பிரபஞ்சத்தி**ற்கும் காரணமானவை. **(9)**

**(அவதாரிகை)** சப்தசிருஷ்டியினின்றும் அர்த்த சிருஷ்டி கூறப்படுகின்றது.

**अथ विशदादपि बिन्दोर्गगनानिलवह्निवारिभूमिजनिः ।**
**एतत्पञ्चकविकृतिर्जगदिदमण्वाद्यजाण्डपर्यन्तम् ॥ १० ॥**

**அத² விஶதா³த³பி பி³ந்தோ³ர்க³க³னானிலவஹ்நிவாரிபூ⁴மிஜனி: ।**
**ஏதத்பஞ்சகவிக்ருதிர்ஜக³தி³த³மண்வாத்³யஜாண்ட³பர்யந்தம் ॥ 10 ॥**

**(பதவுரை)**

**विशदादपि बिन्दोः** = சுக்கிலபிந்துவின் மலர்ச்சியினுல்,
**விஶதா³த³பி பி³ந்தோ³:**
**अथ** = பின்னர்,
**அத²**
**गगनानिलवह्निवारिभूमिजनिः** = ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பூமி ஆகிய
**க³க³னானிலவஹ்நிவாரிபூ⁴மிஜனி:** பஞ்சபூதங்களின் சிருஷ்டியாயிற்று,
**एतत्पञ्चकविकृतिः** = இங்ஙனம் உத்பத்தியான பஞ்சபூதங்களின்
**ஏதத்பஞ்சகவிக்ருதிர்ஜக³தி³:** விகாரமே,
**इदं अण्वादि अजाण्डपर्यन्तं जगत्** = காணப்படும் அணுமுதல், கேழ்க்கப்படும்
**இத³ம் அண்வாதி³** பிரஹ்மாண்ட மீறுகவுள்ள ஸகலப்
**அஜாண்ட³பர்யந்தம் ஜக³த்** பிரபஞ்சங்களுமாயிருக்கின்றது.

**(விரிவுரை)** ஸர்வப்பிரபஞ்சமும் பஞ்ச பூதமயமே. அர்த்தரூபமான பஞ்ச பூதங்கள் சப்தரூப பீஜங்களினின்றும் தோன்றினவென்பது சாஸ்திர சித்தாந்தமாகும்.

இங்ஙனம் ஒன்பதாவது ஶ்லோகத்தால் சப்தப்பிரஹ்மத்தின் ஸ்வரூபமும், பத்தாவது ஶ்லோகத்தால் அர்த்தரூப பஞ்சமஹா பூதங்களின் உத்பத்தியும் கூறப்பட்டன.

**गगनसमीरणदहनोदकभूमि - वर्णसंभूतिः**

**க³க³னஸமீரணத³ஹனோத³கபூ⁴மி - வர்ணஸம்பூ⁴திः**

என்பதிலுள்ள **वर्णसंभूतिः வர்ணஸம்பூ⁴திः** என்னும் பதத்தால் சப்தரூப பிஜங்களின் உத்பத்தியும்,

**गगनानिलवह्निवारिभूमिजनिः**

**க³க³னானிலவஹ்நிவாரிபூ⁴மிஜனிः**

என்பதனால் அர்த்தரூப பஞ்ச மஹா பூதங்களும் குறிப்பிடப்படுவன அறியத்தக்கது. இத்தகைய சப்தார்த்தவடிவ பிரபஞ்சமே நாமரூப்வுலகமாகும். நாமப்பகுதியாகும் சப்தமானது வர்ண, பத, மந்த்ர வடிவமாகவும், ரூபப்பகுதியாகும் அர்த்தமானது கலை, தத்துவம், புவனம் இவைகளின் வடிவமாகவும் இருக்கின்றன.

**வர்ண, பத, மந்த்ர, கலா, தத்துவ, புவனங்க**ளென்னும் இவையாறும் அத்துவாக்களெனப்படும். அத்துவாவென்றல் வழி அல்லது மார்க்கமாகும்.

அகாராதி க்ஷகாரந்தமான மாத்ருகைகள் யாவும் வர்ணத்வா வென்றும், அம்மாத்ருகைகளின் சேர்க்கையாலானவை பதாத்துவாவென்றும், மந்த்ராத்மகமான வை மந்த்ராத்வாவென்றும் கூறப்படும். இவை மூன்றும் விமர்ஶசக்தியின் அம்ச மான நாமப் பகுதியிற்சேர்ந்தன.

பிரகாசாம் சத்தினின்றும் தோன்றியவை கலாதத்துவ புவனங்களென்னும் ரூபப்பகுதியாம். கலைகள் பதினறு; ஐந்தென்பதும் ஒரு பக்ஷம், தத்துவங்கள் சிவாதி பூமி யந்தமான முப்பத்தாறு; புவனங்கள் இருநூற்று இருபத்தினன்கு. இங்ஙனம் இந்த இரண்டு ஶ்லோகங்களினலும் நாமரூபாத்மக ஸகலபிரபஞ்ச சிருஷ்டி கூறப் பட்டது. பஞ்ச மஹா பூதங்களின் விரிவே (விகாரமே) பிரபஞ்ச மென்பது மிகப் பிரஸித்தமான விஷயமாம். **प्रकर्षेण पञ्चते प्रपञ्चः ப்ரகர்ஷேண பஞ்சதே ப்ரபஞ்சः** நாமரூபங்களிரண்டும் மாயிகமெனப்படும்.

அவித்யாப் பிரபஞ்ச சிருஷ்டியைப் பற்றிய இன்றியமையாத சில சிறந்த விஷயங்களாவன: -

**सदैव सोम्येदमग्र आसीत्। तन्नित्यमुक्तमविक्रियम् ।**
**सत्यं ज्ञानमनन्तं ब्रह्म ।**
**सत्यज्ञानानन्दपरिपूर्णं सनातनमेकमेवाद्वितीयं ब्रह्म ॥ १ ॥**

**ஸதை³வ ஸோம்யேத³மக்³ர ஆஸீத். தந்நித்யமுக்தமவிக்ரியம் ।**
**ஸத்யம் ஜ்ஞானமனந்தம் ப்³ரஹ்ம ।**
**ஸத்யஜ்ஞானானந்த³பரிபூர்ண ஸனாதனமேகமேவாத்³விதீயம் ப்³ரஹ்ம ॥ 1 ॥**

இந்தப் பிரபஞ்ச சிருஷ்டிக்குமுன் ஸத்ஸ்வரூபம் ஒன்றே இருந்தது. அது நித்தியமுக்தம்; விகாரப்படாதது.. ஸச்சிதாநந்த வடிவினது; எங்கும் வியாபித்துப் பரிபூர்ணமாயிருப்பது. ஸ்நாதனமானது. இரண்டற்று ஏகமாய் விளங்குவது. அது பிரஹ்மமேயாகும்.

**तस्मिन् मरुशुक्तिकास्थाणुस्फटिकादौ जलरौप्यपुरुषरेखादिवल्लोहितशुक्लकृष्णगुणमयी गुणसाम्यरूपाऽनिर्वाच्या मूलप्रकृतिरा- सीत् । तत्प्रतिविम्बितं यत्तत्साक्षिचैतन्यमासीत् । सा पुनर्विकृतिं प्राप्य सत्त्वोद्रिक्ताऽव्यक्ताख्या आवरणशक्तिरासीत् । तत्प्रतिबिम्बितं यत्तदीश्वरचैतन्यमासीत् । स स्वाधीनमायः सर्वज्ञः सृष्टिस्थिविलयानामादिकर्ता जगदङ्कर रूपो भवति । स्वस्मिन्विलीनं सकलं जगदाविर्भावयति । प्राणिकर्मवशादेष पटो यद्वत्प्रसारितः प्राणिकर्मक्षय। त्पुनस्तिरोभावयति । तस्मिन्नेवाखिलं विश्व सङ्को चितपटवद्वर्तते ॥ २ ॥**

**தஸ்மின் மருஶுக்திகாஸ்தா²ணுஸ்ப²டிகாதௌ³ ஜலரௌப்யபுருஷரேகா²தி³ - வல்லோஹிதஶுக்லக்ருஷ்ணகு³ணமயீ கு³ணஸாம்யரூபா(அ)நிர்வாச்யா மூலப்ரக்ருதிராஸீத் । தத்ப்ரதிவிம்பி³தம் யத்தத்ஸாக்ஷிசைதன்யமாஸீத் । ஸா புனர்விக்ருதிம் ப்ராப்ய ஸத்த்வோத்³ரிக்தா(அ)வ்யக்தாக்²யா ஆவரணஶக்திராஸீத் । தத்ப்ரதிபி³ம்பி³தம் யத்ததீ³ஶ்வரசைதன்யமாஸீத் । ஸ ஸ்வாதீ⁴னமாயஃ ஸர்வஜ்ஞஃ ஸ்ருஷ்டி- ஸ்தி²விலயாநாமாதி³கர்தா ஜக³த³ங்கரரூபோ ப⁴வதி । ஸ்வஸ்மின்விலீனம் ஸகலம் ஜக³தா³விர்பா⁴வயதி । ப்ராணிகர்மவஶாதே³ஷ படோ யத்³வத்ப்ரஸாரிதஃ ப்ராணிகர்மக்ஷய। த்புனஸ்திரோபா⁴வயதி । தஸ்மின் னேவாகி²லம் விஶ்வ ஸங்கோ சிதபடவத்³வர்ததே ॥ 2 ॥**

பரப்பிரஹ்மத்தினின்று, பேய்த்தேரில் ஜலம் போலவும், கிளிஞ்சலில் வெள்ளி போலவும், கட்டையிற் கள்வன் போலவும், ஸ்படிகத்தில் ரேகைபோலவும், கயிற்றிற் பாம்பு போலவும் மித்தையாய், ரஜஸ் ஸத்துவம் தமஸ் என்னும் முக்குண ஸாம்மியவடிவ மூலப் பிரக்ருதி தோன்றிற்று. இது ஸத்துமல்ல; அஸத்துமல்ல; ஸதஸத்துமல்ல. ஆதலின் **அநிர்வாச்சியை** (இத்தகையதென்று கூறமுடியாதது). இதில் பிரதிபிம்பித்த சேதனத்திற்கு ஸாக்ஷிசைதன்ய மென்று பெயர். பின்னர், அந்த மூலப் பிரக்ருதியானது விகாரபாவத்தையடைந்து அவ்வியக்தமென்று கூறப்படும் ஆவரண சக்தியாயிற்று. இதில் பிரதிபலித்த சேதனத்திற்கு **ஈஶ்வரசைதன்ய**மென்றுபெயர். இந்த ஈஶ்வரனுக்கு மாயை ஸ்வாதீனமானது; இவர் ஸர்வக்ஞர். ஸகல பிரபஞ்சத்தின் சிருஷ்டி ஸ்திதி லயங்களுக்கு ஆதி கர்த்தாவாயும், அங்குர (முளை) வடிவமாயும் விளங்குகின்றவராவர். ஒரு மடித்த துணியை விரிப்பதுபோல், தன்னிடத்தில் லயித்திருந்த பிரபஞ்சத்தை, இவர் ஜீவகோடிகளின் கர்ம போகங்கள் காரணமாக, மறுபடியும் கிருஷ்டிக்கின்றனர். அவர்களின் கர்மலயத்தில் இவர் பிரபஞ்சத்தைத் தன்னிடத்தில் மறைத்துக் கொள்ளுகின்றனர்.

**ईशाधिष्ठितावरणशक्तितो रजोद्रिक्ता महदाख्या विक्षेपशक्तिरासीत् ।**
**तत्प्रतिविम्बितं यत्तद्धिरण्यगर्भचैतन्यमासीत् ।**
**स महत्तत्वाभिमानी स्पष्टास्पष्टवपुर्भवति ॥ ३ ॥**

**ஈஶாதி⁴ஷ்டி²தாவரணஶக்திதோ ரஜோத்³ரிக்தா மஹதா³க்²யா விக்ஷேபஶக்திராஸீத் ।**
**தத்ப்ரதிவிம்பி³தம் யத்தத்³தி⁴ரண்யக³ர்ப⁴சைதன்யமாஸீத் ।**
**ஸ மஹத்தத்வாபி⁴மானீ ஸ்பஷ்டாஸ்பஷ்டவபுர்ப⁴வதி ॥ 3 ॥**

ஈஶ்வரோபாதியாகும் அவ்வியக்தமானது ரஜோகுணத்தின் ஆதிக்கியத்தினுல் மஹத்தத்துவமென்னும் பெயர் பெற்றது. இதுதான் **விக்ஷேப சக்தி**யெனப்படும். இதில் பிரதிபலித்த சேதனம் ஹிரண்யகர்ப்பனெனப்படுவன். இவன் ஸ்பஷ்டா ஸ்ப ஷ்ட (அருவுருவ) சரீரத்தோடு கூடி, **மஹத்தத்துவ** அபிமானியாயிருக்கின்றனன்.

**हिरण्यगर्भाधिष्ठितविक्षेपशक्तितः तमोद्रिक्ताऽहङ्काराभिधा स्थूलशक्तिरासीत् ।**
**तत्प्रतिबिम्बितं यत्तद्विराट्चैतन्यमासीत् ।**
**स तदभिमानी स्पष्टवपुः सर्वस्थूलपालको विष्णुः प्रधानपुरुषोऽभवत् ॥**

**ஹிரண்யக³ர்பா⁴தி⁴ஷ்டி²தவிக்ஷேபஶக்திதः தமோத்³ரிக்தா(அ)ஹங்காராபி⁴தா⁴ ஸ்தூ²லஶக்திராஸீத் ।**
**தத்ப்ரதிபி³ம்பி³தம் யத்தத்³விராட்சைதன்யமாஸீத் ।**
**ஸ தத³பி⁴மானீ ஸ்பஷ்டவபுः ஸர்வஸ்தூ²லபாலகோ விஷ்ணுः ப்ரதா⁴னபுருஷோ(அ)ப⁴வத் ॥**

ஹிரண்ய கர்ப்பனது உபாதியாகும் விக்ஷேப சக்தியிலிருந்து தமோகுணத்தின் ஆதிக்கியத்தினுல் அஹங்கார மென்று கூறப்படும் ஸ்தூல சக்தியாயிற்று; அதில் பிரதி பலித்த சேதனன் ஸர்வஸ்தூலப்பிரபஞ்ச பரிபாலகனுன விஷ்ணுவென்னும் பிரதான **புருஷனுவான்**. இவனே விராட் எனப்படுவன்.

**तस्मादात्मन आकाशः संभूतः आकाशाद्वायुः; वायो- रग्निः; अग्नेरापः; अद्भ्यः पृथिवी; तानि पञ्च तन्मात्राणि त्रिगुणानि भवन्ति । स्रष्टुकामो जगद्योनिः तमोगुणमधिष्ठाय सूक्ष्म- तन्मात्राणि भूतानि स्थूलीकर्तुं सोऽकामयत । सृष्टेः परिमितानि भूतान्येकमेकं द्विधा विधाय, तयोरेकं पुनश्चतुर्धा कृत्वा स्वस्वे- तरद्वितीयांशैः पञ्चधा संयोज्य पञ्चीकृतभूतैः अनन्तकोटिब्रह्माण्डानि तत्तदण्डोचितचतुर्दशभुवनानि तत्तद्भुवनोचितगोळकस्थूलशरीराण्य सृजत् ॥ ५ ॥**

**தஸ்மாதா³த்மன ஆகாஶः ஸம்பூ⁴தः ஆகாஶாத்³வாயு**ः; **வாயோ**- **ரக்³னி**ः; **அக்³னேராப**ः; **அத்³ப⁴்யः ப்ருதி²வீ; தானி பஞ்ச தன்மாத்ராணி த்ரிகு³ணானி ப⁴வந்தி । ஸ்ரஷ்டுகாமோ ஜக³த்³யோனிः தமோகு³ணமதி⁴ஷ்டா²ய ஸூக்ஷ்ம- தன்மாத்ராணி பூ⁴தானி ஸ்தூ²லீகர்தும் ஸோ(அ)காமயத । ஸ்ருஷ்டேः பரிமி தானி பூ⁴தான்யேகமேகம் த்³விதா⁴ விதா⁴ய, தயோரேகம் புனஶ்சதுர்தா⁴ க்ருத்வா ஸ்வஸ்கே²தரத்³விதீயாம்ஶைः பஞ்சதா⁴ ஸம்யோஜ்ய பஞ்சீக்ருத பூ⁴தைः அனந்த**

**கோடிப்3ரஹ்மாண்டா3னி தத்தத3ண்டோ3சிதசதுர்த3ஶபு4வனானி தத்தத்3பு4வனேசிதகோ3ளகஸ்தூ2லஶரீராண்யஸ்ருஜத் ॥ 5 ॥**

பிரதான புருஷனுகும் விஷ்ணுவினிடத்திலிருந்து ஆகாசமும், அதனின்று வாயுவும், அதனின்று அக்கினியும், அதனின்று ஜலமும், அதனின்று பூமியும் உண்டாயின. ஜகத்காரணனுகும் அப்பரமாத்மா, சிருஷ்டிக்கும் இச்சையோடு கூடியவனுய்த், தமோகுணத்தை யதிஷ்டித்துக்கொண்டு, மேற்கூறிய பஞ்சதன்மாத்திரைகளை ஸ்தூலீகரிக்கச்செய்தனன்.

## பஞ்சீகரண விளக்கம்.

ஒவ்வொரு ஸூக்ஷ்ம பூதத்தையும் இவ்விரண்டாகப் பிரித்து, அதில் ஒரு பாகத்தை நான்காகப் பிரித்தனன். ஆகாசத்தின் பாதிபாகத்தோடு, வாயுவின் அரைக்கால் பாகம், அக்கினியின் அரைக்கால்பாகம், ஜலத்தின் அரைக்கால்பாகம், பூமியின் அரைக்கால்பாகங்களைச் சேர்க்க **ஸ்தூல ஆகாசமாகும்**.

இங்ஙனமே, வாயுவின் பாதிபாகமும், ஆகாசம், அக்கினி, ஜலம், பூமிகளின் அரைக்கால் அரைக்கால்பாகங்களையும் சேர்க்க **ஸ்தூல வாயுவாகும்**.

அக்கினியின் பாதிபாகத்தோடு, ஆகாசம், வாயு, ஜலம், பூமிகளின் அரைக்கால் பாகங்களைச் சேர்க்க **ஸ்தால அக்கினியாகும்**.

பாதிபாகம் ஜலத்தோடு, அக்கினி, ஆகாசம், வாயு, பூமிகளின் அரைக்கால் அம்சங்களைச் சேர்க்க **ஸ்தூல ஜலமாகும்**.

பூமியின் பாதிபாகத்தோடு, ஜலம், அக்கினி, வாயு ஆகாசங்களின் அரைக்கால் பாகங்களைச் சேர்க்க **ஸ்தூல பூமியாகும்**.

இங்ஙனம் பஞ்சீக்ருதமான ஸ்தூல பஞ்ச மஹா பூதங்களைக்கொண்டே அநந்தகோடி பிரஹ்மாண்டங்களும், அந்த அந்த அண்டங்களுக்குரிய சதுர்த்தச புவநங்களும், அவ்வவற்றிற்குரிய கோளங்களும், ஸ்தூல சரீரங்களும் சிருஷ்டிக்கப்பட்டன.

## சரீரமாகும் பிண்டசிருஷ்டி விளக்கம்.

**ஸூக்ஷ்ம சரீரம்**: - பஞ்சீகரணம் செய்யப்பட்ட பஞ்சபூதங்களால் ஸ்தூல சரீரமாகும் பிண்டம் சிருஷ்டிக்கப்பட்டதென்று மேலே கூறப்பட்டது. அபஞ்சீக்ருத ஸூக்ஷ்ம பூதங்களின் ஸத்வகுண ஸமஷ்டியால் அந்தக் கரணமும், ஒவ்வொரு பூதத்தின் வியஷ்டி ஸத்துவாம்சத்தினுல் கண், காது, முதலிய ஞானேந்திரியங்களும் சிருஷ்டிக்கப்பட்டன. இங்ஙனமே, அபஞ்சீக்ருத ஸூக்ஷ்ம பூதங்களின் ரஜோகுண

ஸமஷ்டியால் பிராணுதிகளும், ஒவ்வொரு பூதத்தின் வியஷ்டி ரஜோ அம்சத்திலுல் வாக்கு, பாணி முதலிய கர்மேந்திரியங்களும் சிருஷ்டிக்கப்பட்டன.

அந்தக்கரணம், ஞாநேந்திரியங்கள், பிராணுதிகள், கர்மேந்திரியங்களென்னும் இவற்றின் ஸமுதாயமே ஸூக்ஷ்ம சரீரமெனப்படும்.

இதில் **பிராணமயம், மனேமயம், விக்ஞானமயம்** என்னும் மூன்று கோசங்கள் அடங்கியிருக்கின்றன.

**ஸ்தூலசரீரம்: -** பஞ்சீகரணம் செய்யப்பட்ட ஸ்தூல பஞ்ச பூதங்களின் தமோ குண ஸூக்ஷ்மாம்சத்திலுல் எலும்பு, நரம்பு, தோல், இரத்தம், மாம்ஸம், நகம், ரோமம், சுக்கிலம் முதலிய தாதுக்களோடு கூடிய ஸ்தூல சரீரம் சிருஷ்டிக்கப் பட்டது. இது **அந்நமயகோசமாகும்**.

**காரணசரீரம்: -** மூலப்பிரக்ருதியே காரணசரீரமெனப்படும். இது குணஸாம் மியாவஸ்தையில் மாயையென்னும் பெயர் பெற்றுக், காரணேபாதியாய் ஈஶ்வரனு க்குக் காரண சரீரமாகின்றது. குணவைஷம்மியாவஸ்தையில் அவித்தையென்னும் பெயர் பெற்றுக், காரியோபாதியாய் ஜீவனுக்குக் காரணசரீரமாகின்றது. இது **ஆநந்த மயகோச** மெனப்படும். ஜீவன் ஸ்தூல சரீரத்தை யபிமானித்து விஶ்வனென்றும், ஸூக்ஷ்ம சரீரத்தையபிமானித்துத் தைஜஸனென்றும், காரண சரீரத்தையபிமானித் துப் பிராக்ஞனென்றும் விவஹரிக்கப்படுவான்.

இங்ஙனமே, ஈஶ்வரனும் ஸமஷ்டிஸ்தூலோபாதியோடு கூடி விராட்டென் றும், ஸமஷ்டி ஸூக்ஷ்மோபாதியோடு கூடி ஹிரண்யகர்ப்பனென்றும், ஸமஷ்டி காரணே பாதியோடு கூடி ஸூத்திராத்மா, அல்லது அந்தர்யாமி யென்றும் விவஹரி க்கப்படுவான்.

இதன் பிரமாணங்களாவன: -

**सर्वज्ञेशो मायालेशसमन्वितो व्यष्टिदेहं प्रविश्य तया मोहितो जीवत्वमगमत् । शरीरत्रयतादात्म्यात्कर्तृत्वभोक्तृत्वमगमत् । जाग्रत्स्वप्न सुषुप्तिमूर्च्छामरणधर्मयुक्तो घटीयन्त्र वदुद्विग्नो जातो मृत इव कुलालचक्रन्यायेन परिभ्रमति ॥**

**ज्ञानेन्द्रियपञ्चकं, कर्मेन्द्रियपश्चर्कं, अन्तःकरणचतुष्टयम्, -अविद्या-काम- कर्म- तमांसि च पुरम्। ईशाज्ञया विराट् व्यष्टिदेहं प्रविश्य बुद्धिमधिष्ठाय विश्वत्वमगमत् । विज्ञानात्मा चिदाभासो विश्वो व्यावहारिको जाग्रत् स्थूलदेहाभिमानी कर्मभूरिति च विश्वस्य नाम भवति ।।**

**ईशाज्ञया हिरण्यगर्भः व्यष्टिसूक्ष्मशरीरं प्रविश्य मनोऽधिशठाय तैजसत्वमगमत्। तैजसः प्रातिभासिकः स्वप्नकल्पित इति तैजसस्य नामानि भवन्ति ॥**

ईशाज्ञया सूत्रात्मा मायोपाधिरव्यक्तसमन्वितो व्यष्टिकारणशरीरं प्रविश्य प्राज्ञत्वमगमत्। प्राज्ञः अविच्छिन्नः पारमार्थिकः सुषुप्त्यभिमानीति प्राज्ञस्य नामानि भवन्ति ॥

अव्यक्तलेशाज्ञानाच्छादितपारमार्थिकजीवस्य तत्वमस्यादि- महावाक्यानि ब्रह्मकतां जगुः । नेतरयोः व्यावहारिकप्रातिभासि- कयोः । जाग्रत्स्वप्नसुषुप्तिमूर्च्छानामन्या ब्रह्मादिस्तम्ब पर्यन्तं सर्व जीवभयप्रदा स्थूलदेहविसर्जनी मरणावस्था भवति ॥

कामकर्मान्विताविद्याभूतवेष्टितो जीवो देहान्तरं प्राप्य लोकान्तरं गच्छन् प्राकर्मपरिपाकेनावर्तान्तरकीटवाद्विश्रान्ति नैव गच्छति । सत्कर्मपरिपाकतो बहूनां जन्मनामन्ते नृणां मोक्षेच्छा जायते । तदा सद्गुरुमाश्रित्य चिरकालसेवया बन्धान्मोक्षं कश्चित्प्रयात्ति ॥

अविचारकृतो बन्धो विचारान्मोक्षो भवति । तस्मात्सदा विचारयेत् । अध्यारोपापवादतः स्वरूपं निश्चेतुं शक्यते । तस्मात् सदा विचारयेत्। जगज्जीवपरेषां जीवभाव-जगद्भाव-पर- भावबाधे प्रत्यगभिन्नं ब्रह्मैव शिष्यते ॥

ஸர்வஜ்ஞேஶோ மாயாலேஶஸமன்விதோ வ்யஷ்டிதே³ஹம் ப்ரவிஶ்ய தயா மோஹிதோ ஜீவத்வமக³மத் । ஶரீரத்ரயதாதா³த்ம்யாத்கர்த்ருத்வபோ⁴க்த்ருத்வமக³மத் । ஜாக்³ரத்ஸ்வப்ன ஸுஷுப்திமூர்ச்சா²மரணத⁴ர்மயுக்தோ க⁴டீயந்த்ரவது³த்³விக்³னோ ஜாதோ ம்ருத இவ குலாலசக்ரந்யாயேன பரிப்⁴ரமதி ॥

ஜ்ஞானேந்த்³ரியபஞ்சகம், கர்மேந்த்³ரியபஸ்சர்க, அந்தஃகரணசதுஷ்டயம், -அவித்³யா-காம-கர்ம-தமாம்ஸி ச புரம்। ஈஶாஜ்ஞயா விராட் வ்யஷ்டிதே³ஹம் ப்ரவிஶ்ய பு³த்³தி⁴மதி⁴ஷ்டா²ய விஸ்வத்வமக³மத் । விஜ்ஞானாத்மா சிதா³பா⁴ஸோ விஶ்வோ வ்யாவஹாரிகோ ஜாக்³ரத் ஸ்தூ²லதே³ஹாபி⁴மானீ கர்மபூ⁴ரிதி ச விஸ்வஸ்ய நாம ப⁴வதி ॥

ஈஶாஜ்ஞயா ஹிரண்யக³ர்ப⁴ஃ வ்யஷ்டிஸூக்ஷ்மஶரீரம் ப்ரவிஶ்ய மனோ(அ)தி⁴- ஶ்டா²ய தைஜஸத்வமக³மத்। தைஜஸஃ ப்ராதிபா⁴ஸிகஃ ஸ்வப்ன கல்பித இதி தைஜஸஸ்ய நாமானி ப⁴வந்தி ॥

ஈஶாஜ்ஞயா ஸூத்ராத்மா மாயோபாதி⁴ரவ்யக்தஸமன்விதோ வ்யஷ்டிகா-ரணஶரீரம் ப்ரவிஶ்ய ப்ராஜ்ஞத்வமக³மத்। ப்ராஜ்ஞஃ அவிச்சி²ன்னஃ பாரமார்தி²கஃ ஸுஷுப்யபி⁴மானீதி ப்ராஜ்ஞஸ்ய நாமானி ப⁴வந்தி ॥

அவ்யக்தலேஶாஜ்ஞானாச்சா²தி³தபாரமார்தி²கஜீவஸ்ய தத்வமஸ்யாதி³ - மஹாவாக்யானி ப்³ரஹ்மகதாம் ஜகு³ஃ । நேதரயோஃ வ்யாவஹாரிகப்ராதிபா⁴ஸி-கயோஃ । ஜாக்³ரத்ஸ்வப்னஸுஷுப்திமூர்ச்சா²நாமன்யா ப்³ரஹ்மாதி³ஸ்தம்வ பர்யந்தம் ஸர்வஜீவப⁴யப்ரதா³ ஸ்தூ²லதே³ஹவிஸர்ஜனீ மரணாவஸ்தா² ப⁴வதி ॥

**காமகர்மான்விதாவித்³யாபூ⁴தவேஷ்டிதோ ஜீவோ தே³ஹாந்தரம் ப்ராப்ய லோகாந்தரம் க³ச்ச²ன் ப்ராகர்மபரிபாகேனாவர்தாந்தரகீடவாத்³விஶ்ராந்தி நைவ க³ச்ச²தி । ஸத்கர்மபரிபாகதோ ப³ஹூனாம் ஜன்மநாமந்தே ந்ருணாம் மோக்ஷேச்சா²**

**ஜாயதே । ததா³ ஸத்³கு³ருமாஶ்ரித்ய சிரகாலஸேவயா ப³ந்தா⁴ன்மோக்ஷம் கஶ்சித்ப்ரயாத்தி ॥**

**அவிசாரக்ருதோ ப³ந்தோ⁴ விசாரான்மோக்ஷோ ப⁴வதி । தஸ்மாத்ஸதா³ விசாரயேத் । அத்⁴யாரோபாபவாத³த꞉ ஸ்வரூபம் நிஶ்வேதும் ஶக்யதே । தஸ்மாத் ஸதா³ விசாரயேத்। ஜக³ஜ்ஜீவபரேஷாம் ஜீவபா⁴வ-ஜக³த்³பா⁴வ-பர- பா⁴வபா³தே⁴ ப்ரத்யக³பி⁴ன்னம் ப்³ரஹ்மைவ ஶிஷ்யதே ॥**

நாமரூபப் பிரபஞ்சத்தின் அத்தியாரோபமே இந்த அவித்யாபாதத்தின் விஷயமாகும். இதில் ஜகத்து, ஜீவன், ஈஶ்வரன் என்பவற்றின் பேதமும், இது காரணமாய்த்தோன்றிய துவைதப்பிராந்தியும், இது காரணமாய்ப் பிரவிருத்தி நிவர்த்திகளும், இவை காரணமாய் ஸுகதுக்கங்களும் ஏற்பட்டு, புண்ணிய பாபரூப கர்மத்தின் வயப்பட்டு ஜனன மரணரூப ஸம்ஸார பந்தமானது ஏற்படுகின்றது. இதன் (கல்பித பந்தத்தின்) நிவ்ருத்தி அபவாதத்திஞல் ஏற்படுகின்றது. அவித்தையால் மித்தியா பந்தமேற்பட்டது. இங்ஙனம் ஏற்பட்ட மித்தியா பந்தமானது வித்தையால் நிவர்த்தியாகுமென்பது சாஸ்திரஸித்தமாகும்.

**ज्ञानादेव तु कैवल्यम् । विद्ययाऽमृतमश्नुते ।**

**ஜ்ஞாநாதே³வ து கைவல்யம் । வித்³யயா(அ)ம்ருதமஶ்னுதே ।**

என்னும் ஶ்ருதிப்பிரமாணங்கள் **ஞானம்**, **அல்லது வித்தையே பந்த நிவர்த்திக்கு ஸாக்ஷாத் ஸாதன**மென்று அறிவுருத்துகின்றன.

**ஸ்ரீ காமகலா விலாஸம்**
**அவித்யா பாதம்**
**முற்றிற்று.**

# ஸ்ரீகாமகலாவிலாஸம்.

## ஆநந்தோல்லாஸம்

### வித்தியாபாதம்

(**அவதாரிகை**) அவித்தியாபாதத்தில் சிருஷ்டிக்கிரமம் கூறப்பட்டது. சிருஷ்டி யானது பாரமார்த்திகமாய் இல்லவே யில்லையென்றும், அது மயக்கம் காரணமாய்த் தோன்றிய அத்தியாஸமே யாமென்றும் முன் அவித்தியா பாதத்தில் நன்குவிமர்சிக் கப்பட்டுள்ளது. அவித்தியா நிவர்த்தியானது வித்தையினாலும், அத்தியாஸ நிவர்த்தி யானது அதிஷ்டான ஞானத்தினாலு மேற்படுமென்பது பரம ஸித்தாந்தமாகும்.

**वाचारम्भणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम् ॥**

**வாசாரம்ப⁴ணம் விகாரோ நாமதே⁴யம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம் ॥**

காரணமாகும் மண்ணிலிருந்து தோன்றிய பருத்த வயிறு, குறுகலான கழுத்து இவைகளோடு கூடிய கடமானது சொன்மாத்திரமாய் விளங்குவதாகும். கடத்தி லுள்ள உண்மையான பொருள் மண்ணேயன்றோ? இங்ஙனமே, பரமாத்மாவினிடத் தில் அவித்தையால் தோன்றும் பிரபஞ்சம் பரமாத்மாவைத்தவிற இல்லவேயில்லை. உள்ளது பரமாத்மா ஒன்றுதான். பிரபஞ்சம், பேதஞானம், விருப்புவெறுப்புகள், பிரவருத்திநிவ்விருத்திகள், ஸுகதுக்கங்கள், தர்மாதர்மங்கள், புண்ணிய பாபங்கள், முதலியவற்றின் தோற்றம் அத்தியாஸமே யாமென்று ஸந்தேக விபரீதங்களற அறிந்து ஸ்வஸ்வரூப ஸ்திதியில் நிலைத்து நிற்கும் ஸாதனங்களைக் கூறுதலே வித்தியாபாதத்தின் நோக்கமாகும்.

## வித்யை தேவதைகளின் அபேதம்.

(**அவதாரிகை**) மந்த்ர தேவதைகளின் அபேதம் இந்த ஶ்லோகத்தில் நிரூபணம் செய்யப்படுகின்றது.

**बिन्दुद्वितयं यद्वदविहीनं परस्परं तद्वत् ।**
**विद्यादैव तयोरपि न भेदलेशोऽस्ति वेद्यवेदकयोः ॥ ११ ॥**

**பி³ந்து³த்³விதயம் யத்³வத³விஹீனம் பரஸ்பரம் தத்³வத் ।**
**வித்³யாதை³வ தயோரபி ந பே⁴த³லேஶோ(அ)ஸ்தி வேத்³யவேத³கயோ꞉ ॥ 11 ॥**

**(பதவுரை)**

**यद्वत्** = எங்ஙனம்,
**யத்³வத்**

**बिन्दुद्वितयं** = இரக்த சுக்கில ஸ்வரூப இரண்டு
**பி3ந்து3த்3விதயம்** அபராபிந்துக்களும், அல்லது பரா அபராவென்னும் இரண்டுபிந்துக்களும்,

**परस्परं** = ஒன்றுக்கொன்று,
**பரஸ்பரம்**

**भेदविहीनं** = பேதமற்றனவோ,
**பே4த3விஹீனம்**

**तद्वत्** = அங்ஙனமே,
**தத்3வத்**

**विद्यादैवतयो:** = மந்த்ரம், தேவதை இவைகளுக்கும்,
**வித்3யாதை3வதயோ:**

**वेद्यवेदकयोरपि** = வாச்சியவாசகங்களுக்கும், அல்லது
**வேத்3யவேத3கயோரபி** உபாஸ்ய உபாஸகர்களுக்கும்,

**भेदलेशोऽपि नास्ति** = சிறிதளவும் பேதமில்லை.
**பே4த3லேஶோ(அ)பி நாஸ்தி**

**குறிப்பு:** - பரப்பிரஹ்மமானது பிரபஞ்சத்தைச் சிருஷ்டிக்க நினைத்தபோது அதற்கு மஹாபிந்துவென்னும் விவகாரம் ஏற்படுகின்றது. ஜடசக்தியாகும் மாயோபாதியால், மஹாபிந்துவென்னும் பராபிந்துவே அபராபிந்துவாக மாறுகின்றது.

அஸத் ஜட துக்கரூப அவித்தியாப் பிரபஞ்சகாரணத்துவம் அபராபிந்துவிலும், ஸத், சித், ஆநந்தவடிவ வித்யாப் பிரபஞ்ச காரணத்துவம் பராபிந்துவிலும் உள்ளதாக அறியத்தக்கது.

**(விசேஷவுரை)** அபேத தரிசனமே ஞானமாதலின் இந்த பாதத்தில் அபேதமே பிரதிபாதிக்கப்படுகின்றது.

வாச்சியமாகும் அர்த்தப் பிரபஞ்சத்திற்கும், வாசகமாகும் சப்தப்பிரபஞ்சத்திற்கும், பேதமில்லை. சிவ சக்திகளுக்குப் பேதமில்லை யாதலின். இங்ஙனமே வாக்பவாதி மூன்று பீஜங்களுக்கும், சிருஷ்டியாதி கிருத்தியங்களுக்கும், பிரமாணுதி திரிபுடிகளுக்கும், ஜாக்கிரதாதி மூன்று அவஸ்தைகளுக்கும், காமகிரியாதி பீடத்திரயங்களுக்கும், இச்சையாதி சக்தித்திரயங்களுக்கும் யாதொரு பேதமுமில்லை யென்று இந்த வித்தியாபாதம் பிரதிபாதிக்கின்றது.

அபேதத்தைப் பிரதிபாதிக்கும் பிரமாணங்களாவன: -

**पराविन्दुस्वरूपम् -**
**पराबिन्दुस्वरूपं तु सृष्टेः पूर्वस्थितिः स्मृताः ।**
**शिवशक्तिसामरस्यं तुरीयपदसंज्ञिका ॥**

**तुरीयस्वरूपम् -**

**लोकत्रयादतीतं च मण्डलत्रयतः परम् ।**
**शरीरत्रयतोऽन्यत्तु कूटत्रयपरं तथा ॥**
**त्रिभुजायाः परं यत्तु मूर्तित्रितयतः परम् ।**
**यस्मात्पदत्रयं जातं कालत्रयपरं तथा ॥**
**अवस्थात्रयतोऽन्यत्तु तत्तुरीयमितीर्यते ।**
**तुरीयं तु परारूपं परा ब्रह्मस्वरूपिणी ॥**
**चिदानन्दस्वरूपा सा ज्योतीरूपा महेश्वरी ।**
**चिश्चन्द्रमण्डलं बिन्दुरग्नीषोममयं स्मृतम् ।**
**सर्वशक्तिमयं ब्रह्मतत्वं चिद्विन्दुरुच्यते ॥**

**सृष्टिक्रमः -**

**गर्भस्थमायोद्रेकाच्च सृष्टिकालस्य संभवात् ।**
**स विन्दुः स्फुटितं याति त्रिभुजाकारतां गता ॥**
**गुणत्रयतनुः सोऽभूत् कोणविन्दुत्रयान्वितः ।**
**अव्यक्तमातृकारूपस्तत्वात्मा व्यक्त उच्यते ॥**
**पराशक्तेस्तु संकल्पाज्जाता तच्छायतां गता ।**
**मायारूपा हि पश्यन्ती सृष्टिस्थित्यन्तकारिणी ॥**
**परापरेति विख्याता परा ब्रह्मस्वरूपिणी ।**
**अपरा हि जगद्रूपा मोहिनीति प्रकीर्त्यते ॥**
**विन्दुभूता पराशक्तिः सर्वकारणकारणा ।**
**तत्प्रतिच्छायरूपा सा पश्यन्ती सर्वमोहिनी ॥**
**चिद्विन्दुरेव पुरुषः प्रकाशात्मा सदाशिवः ।**
**विमर्शरूपिणी शक्तिः पश्यन्तीरूपतां गता ॥**
**सितशोणविमिश्राख्यं यस्माञ्चिद्विन्दुरुच्यते ।**
**पश्यन्त्यामपि तन्मिश्रमुभयांशात्मिका हि सा ॥ इति ।**

**பராவிந்து3ஸ்வரூபம் -**

**பராபி3ந்து3ஸ்வரூபம் து ஸ்ருஷ்டேः பூர்வஸ்தி2திः ஸ்ம்ருதாः ।**
**ஶிவஶக்திஸாமரஸ்யம் துரீயபத3ஸஞ்ஜ்ஞிகா ॥**

**துரீயஸ்வரூபம் -**

**லோகத்ரயாத3தீதம் ச மண்ட3லத்ரயத: பரம் ।**
**ஶரீரத்ரயதோ(அ)ன்யத்து கூடத்ரயபரம் ததா2 ॥**
**த்ரிபு4ஜாயா: பரம் யத்து மூர்தித்ரிதயத: பரம் ।**
**யஸ்மாத்பத3த்ரயம் ஜாதம் காலத்ரயபரம் ததா2 ॥**
**அவஸ்தா2த்ரயதோ(அ)ன்யத்து தத்துரீயமிதீர்யதே ।**
**துரீயம் து பராரூபம் பரா ப்3ரஹ்மஸ்வரூபிணீ ॥**
**சிதா3னந்த3ஸ்வரூபா ஸா ஜ்யோதீரூபா மஹேஶ்வரீ ।**
**சிஶ்சந்த்3ரமண்ட3லம் பி3ந்து3ரக்3னீஷோமமயம் ஸ்ம்ருதம் ।**
**ஸர்வஶக்திமயம் ப்3ரஹ்மதத்வம் சித்3விந்து3ருச்யதே ॥**

**ஸ்ருஷ்டிக்ரம: -**

**க3ர்ப4ஸ்த2மாயோத்3ரேகாஞ்ச ஸ்ருஷ்டிகாலஸ்ய ஸம்ப4வாத் ।**
**ஸ விந்து3: ஸ்பு2டிதம் யாதி த்ரிபு4ஜாகாரதாம் க3தா ॥**
**கு3ணத்ரயதனு: ஸோ(அ)பூ4த் கோணவிந்து3த்ரயான்வித: ।**
**அவ்யக்தமாத்ருகாரூபஸ்தத்வாத்மா வ்யக்த உச்யதே ॥**
**பராஶக்தேஸ்து ஸங்கல்பாஜ்ஜாதா தச்சா2யதாம் க3தா ।**
**மாயாரூபா ஹி பஶ்யந்தீ ஸ்ருஷ்டிஸ்தி2த்யந்தகாரிணீ ॥**
**பராபரேதி விக்2யாதா பரா ப்3ரஹ்மஸ்வரூபிணீ ।**
**அபரா ஹி ஜக3த்3ரூபா மோஹிநீதி ப்ரகீர்த்யதே ॥**
**விந்து3பூ4தா பராஶக்தி: ஸர்வகாரணகாரணா ।**
**தத்ப்ரதிச்சா2யரூபா ஸா பஶ்யந்தீ ஸர்வமோஹினீ ॥**
**சித்3விந்து3ரேவ புருஷ: ப்ரகாஶாத்மா ஸதா3ஶிவ: ।**
**விமர்ஶரூபிணீ ஶக்தி: பஶ்யந்தீரூபதாம் க3தா ॥**
**ஸிதஶோணவிமிஶ்ராக்2யம் யஸ்மாஞ்சித்3விந்து3ருச்யதே ।**
**பஶ்யந்த்யாமபி தன்மிஶ்ரமுப4யாம்ஶாத்மிகா ஹி ஸா ॥ இதி ।**

இந்தப் பிரமாணங்களின் தாத்பர்யம் யாதெனில், சிருஷ்டிக்குமுன் சிவசக்தி ஸாமரஸ்யமாகும் பராபிந்து ஒன்றே யிருந்தது.

அதுலோகத்திரயங்கள், மண்டலத்திரயங்கள், சரீரத்திரயங்கள், கூடத்திரயங் கள், மூர்த்தித்திரயங்கள், பதத்திரயங்கள், காலத்திரயங்கள், அவஸ்தாத்திரயங்கள் முதலியவற்றிற்கு அதீதஸ்வரூபமானது. இது துரீயவடிவினதாகும். இதுவே சித்பிந்துவுமாகும். இது பரப்பிரஹ்ம ஸ்வரூபிணியான பரையென்றும், சிதாநந்தவடிவ ஸ்வயம்பிரகாசமஹேஶ்வரியென்றும், அக்னீஷோமாதமத் சித்சந்த்ர மண்டல பிந்துவென்றும், ஸர்வசக்திமயமான பிரஹ்மதத்துவமென்றுங் கூறப்படும்.

இந்த சித்பிந்துவானது சிருஷ்டிகாலத்தில் தனக்குள் அடங்கியுள்ள மாயை யைத் தோற்றுவித்து, விகஸிக்கச் செய்கின்றது. மாயை விகஸித்து, முக்குணங்க ளோடு திரிகோணரூபமாய்த் தோன்றிற்று.

பரையின் ஸங்கல்பத்தினுல் தோற்றிய பிரதிபிம்ப வடிவ மாயையே சிருஷ்டி ஸ்திதி லயங்களுக்குக் காரணமாகிய பஶ்யந்தீயாயிற்று. இந்த பஶ்யந்தியே வித்யா அவித்யாஸ்வரூபங்களுக்கு மத்தியகதஸ்தானம். இது சித்பிந்துவின் விமர்சாம்சம். சித்பிந்துவின் பிரகாசாம்சம் ஸதாசிவமாகும். சித்பிந்துவினது பிரகாசவிமர்சங்களின் ஸாமரஸ்யவடிவ மிஶ்ரபிந்துவே ஜகத்காரண அபராகாம கலையாம்.

ஆகவே காரணகாரியங்களுக்குப் பேதமில்லையென்னும் நியாயம் பற்றி, மேற் கூறிய பிரமாணங்கள் அபேதத்தைப் பிரதிபாதிக்கின்றனவென்று கூறப்பட்டது.

## வித்தை - அவித்தைகளின் விமர்சமாவது: -

**विद्यां चाविद्यां च यस्तद्वेदोभयँ सह ।**
**अविद्यया मृत्युं तीर्त्वा विद्ययाऽमृतमश्नुते ॥**

**வித்³யாம் சாவித்³யாம் ச யஸ்தத்³வேதோ³ப⁴யம் ஸஹ ।**
**அவித்³யயா ம்ருத்யும் தீர்த்வா வித்³யயா(அ)ம்ருதமஶ்னுதே ॥**

வித்தை - அவித்தைகளின் ஸ்வரூபத்தை நன்கறிந்து அவித்தையால் மிருத்யுவைத்தாண்டி, வித்தையால் மோக்ஷத்தை யடைகின்றுன்.

அவித்தையால் மிருத்யுவைக் கடத்தல் எங்ஙனமெனின், வர்ணுஶ்ரமதர்மவிகிதங்களான கர்மாக்களைப் பயன் கருதி (காம்யத்தோடு) செய் யின், அவன் அவித்யாபாசபத்தனுகின்றனன். நிஷ்காமனுய் ஈஸ்வராக்ஞையென்று கருதி விஹிதகர்மாக்களைச்செய்யின், அவை கர்த்தாவினது சித்த சுத்திக்குக் காரண மாய், அவித்தையென்னும் மிருத்யுவைக் கடத்தற்குச் சிறந்த ஸாதனமாகின்றன.

உபாஸ்ய - உபாஸக அபேத, அல்லது, தேவதாத்ம அபேத, அல்லது, வித்யா - வேதக அபேதஞானமாகும் வித்தையால் அநர்த்த நிவர்த்தி, பரமாநந்தப் பிராப்திரூப அம்ருதத்துவம் ஸித்திக்கின்றது.

**विद्या=स्वात्मरूपं ; अभेदज्ञानम् ।**
**अविद्या भ्रान्तिरूपं; भेदज्ञानम् ॥**

**வித்³யா = ஸ்வாத்மரூபம்; அபே⁴த³ஜ்ஞானம் ।**
**அவித்³யா ப்⁴ராந்திரூபம்; பே⁴த³ஜ்ஞானம் ॥**

சிவஸ்வரூபமானது பரம், வித்தை, பிராந்தியென மூன்றுரூபமாய் விளங்குகின்றது.

**भ्रान्तिर्विद्या परं चेति शिवरूपमिदं त्रयम् ।**
**अर्थेषु भिन्नरूपेषु विज्ञानं भ्रान्तिरुच्यते ॥**
**आत्माकारेण संवित्तिः बुद्धेर्विद्येति कथ्यते ।**

**विकल्परहितं तत्त्वं परमित्यभिधीयते ॥**

**ப்⁴ராந்திர்வித்³யா பரம் சேதி ஶிவரூபமித³ம் த்ரயம் ।
அர்தே²ஷு பி⁴ன்னரூபேஷு விஜ்ஞானம் ப்⁴ராந்திருச்யதே ॥
ஆத்மாகாரேண ஸம்வித்தி꞉ பு³த்³தே⁴ர்வித்³யேதி கத்²யதே ।
விகல்பரஹிதம் தத்த்வம் பரமித்யபி⁴தீ⁴யதே ॥**

**मोक्षप्रदज्ञानरूपत्वाद्विद्या-**

**மோக்ஷப்ரத³ஜ்ஞானரூபத்வாத்³வித்³யா-**

**विद्या नाम श्रीविद्येव**

**வித்³யா நாம ஶ்ரீவித்³யேவ**
= வித்தையென்றல் ஸ்ரீவித்தையே யாகும். இது,

**न शिल्पादिज्ञानयुक्ते विद्वच्छन्दोऽभियुज्यते ।
मोक्षैकहेतुविद्यावान् यः स विद्वानितीर्यते ॥
मोक्षैकहेतुर्विद्या तु श्रीविद्यैव न संशयः ॥**

**ந ஶில்பாதி³ஜ்ஞானயுக்தே வித்³வச்ச²ந்தோ³(அ)பி⁴யுஜ்யதே ।
மோக்ஷைகஹேதுவித்³யாவான் ய꞉ ஸ வித்³வானிதீர்யதே ॥
மோக்ஷைகஹேதுர்வித்³யா து ஶ்ரீவித்³யைவ ந ஸம்ஶய꞉ ॥**

என்னும் பிரமாணத்தால் நன்கு விளங்குகின்றது.

அவித்தையாலேற்பட்டதும், பிரத்தியக்ஷ ஸித்தமானதுமான பேதத்தை யொழிப்பது வித்தையாதலின், அது வேதப்பிரமாணமொன்றினுலேயே ஸித்திப்பதாயிருக்கின்றது.

வேதப்பிரமாண ஸாத்தியமாயுள்ள ஸ்ரீபிரஹ்மவித்தையும் ஆத்மப் பிரஹ்மைக்கிய ஞானத்தை லக்ஷணையால் உணர்த்துகின்றதென்பதறியத்தக்கது.

ஐக்கியஞானபோதகம் மஹாவாக்கியங்களாம்.

எந்த முமுக்ஷு ஸத்குருவின் பால் ஐக்கிய ஞான ஜனகமாகிய மஹாவாக்கியத்தையுபேதேச பூர்வகமாய்ச் சிரவணம் செய்கின்றனோ, அவன், அந்த க்ஷணத்திலேயே அவித்தையினின்றும் நீங்கி, ஆத்மாபின்ன பிரஹ்மஸ்வ ரூபஞகின்றனன். ஆதலின்,

**परीक्ष्य लोकान् कर्मचितान् ब्राह्मणो निर्वेदमायान्नास्त्यकृतः कृतेन; तद्विज्ञानार्थं स गुरुमेवाभिगच्छेत्समित्पाणिः श्रोत्रियं ब्रह्मनिष्ठम् ॥**

**பரீக்ஷ்ய லோகான் கர்மசிதான் ப்³ராஹ்மணோ நிர்வேத³மாயான்னு ஸ்த்யக்ருத꞉ க்ருதேன; தத்³விஜ்ஞானார்த²ம் ஸ கு³ருமேவாபி⁴க³ச்சே²த்ஸமித் பாணி꞉ ஶ்ரோத்ரியம் ப்³ரஹ்மநிஷ்ட²ம் ॥**

ஸாதனங்களோடு கூடிய முமுக்ஷுவானவன் நல்லதும் தீயதுமான கர்ம பலன்களால் கிலேசத்தையடைந்து தவிக்கும் ஜனங்களைப்பார்த்து விவேக முற்றவனுய், உலகத்தில் வைராக்யத்தையடைந்து, "ஒரு ஜீவன் கர்மாசரணையால் துக்க நிவர்த்தியைப் பெறுதற்குமுடியவே முடியாதென்றும், அக்ருதமாயுள்ள ஞானத் தினுல்தான் அநர்த்த நிவர்த்தி, ஆநந்தப் பிராப்திவஸித்திக்குமென்றும்" நன்கறிந்து, அத்தகைய தத்துவ ஞானேபதேசத்தின் பொருட்டு உலர்ந்த ஸமித்தொன்றைக் கையில் தாங்கி, சுரோத்திரியனும் பிரஹ்ம நிஷ்டனுமான ஸத்குருவை நாடிச் செல்லல் வேண்டும்.

அக்ருதம் - கர்மாவினுல் அடைய முடியாதது.

இங்ஙனம் ஸத்குருவை நாடிச்சென்று அவரது அநுக்கிரஹத்தைப் பெற்ற வனே ஜனன மரண ரூப ஸம்ஸாரத்தைக் கடக்கின்றுன்;

**आचार्यवान् पुरुषो वेद**

**ஆசார்யவான் புருஷோ வேத³**

ஆசாரியனையடைந்த புருஷனே யுண்மையை யறிகின்றுன். அபேதமே உண்மையா கும்.

இவ்வபேதம்

**वेद्यवेदकयोः भेदलेशोऽपि नास्ति**

**வேத்³யவேத³கயோ꞉ பே⁴த³லேஶோ(அ)பி நாஸ்தி**

என்பதனுல் கூறப்பட்டுள்ள தறியத்தக்கது.

வேத்தியம் - ஜீவப்பிரஹ்மைக்கியம்; வேதகம் - அகண்டார்த்த போதக மஹாவாக்கியம். அல்லது, வேத்யம் - மஹாத்திரிபுரஸுந்தரி; வேதகம் - ஸ்ரீபஞ்சத சாக்ஷரீ மஹாவித்யை. இவ்விரண்டிற்குமுள்ள ஐக்கியம் சக்கியார்த்தத்தினுலா? அல்லது லக்ஷ்யார்த்தத்தினுலா? எனின், லக்ஷ்யார்த்தத்தினுலேயேயாமென்று கூறுதல் தகுதியாகும்.

**यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह ।**
**अवाङ्यनसगोचरम् ॥**
**யதோ வாசோ நிவர்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ ।**
**அவாங்யனஸகோ³சரம் ॥**

முதலிய ஶ்ருதிகள் வாச்சியார்த்தத்தை நிஷேதிக்கின்றன.

**विन्दुद्वितयं यद्वद्भेदविहीनं परस्परं तद्वत् ।**

**விந்து³த்³விதயம் யத்³வத்³பே⁴த³விஹீனம் பரஸ்பரம் தத்³வத் ।**

பராபர பிந்துக்கள் எங்ஙனம் தம்முள் பேதமற்றனவோ, அங்ஙனமே என்று ஹேது கூறப்பட்டுள்ளது அறியத்தக்கது.

பராபர பிந்துக்களுக்கு ஐக்கியங் கூறுமிடத்தில் கவனிக்கவேண்டிய விஷய மாவது: - பரத்தில் அபரம் அத்தியாஸம்; ஆதலின் அபரம் உபாதி; பரம் உபாதியற்ற சித்சக்தி வடிவம். அபரம் ஜடசக்திஸ்வரூப மாயோபாதி ஸஹிதமானது; நிருபாதி கத்தில் ஸோபாதிகத்துவம் கற்பனை. உபாதி நீக்கமாகும் பேதராஹித்தியம் அகண்டா கார விருத்தியாலேற்படுவதாகும். ஆகவே இந்த ஶ்லோகம் பேதராஹித்தியத்தைக் கூறியதாகும். **(11)**

## திரிபுடித்தோற்றம்

**(அவதாரிகை)** உபாதியும், உபஹிதசேதனமுமாகிய சக்தி சிவங்கள் (ஜடசேத னங்கள்) தாதாத்மிய ஸம்பந்தத்தினுல் சப்தார்த்த வடிவங்களாய் விளங்கி, சிருஷ்டி, ஸ்திதி, லயங்களென்னும் திரிபுடீரூப பேதத்தோடு கூடிய த்ரிபீஜ ரூபமாய் ஆயின வென்று இதில் கூறப்படுகின்றது.

**वागर्थौ नित्ययुतौ परस्परं शक्तिशिवमयावेतौ ।**
**सृष्टिस्थितिलय भेदौ त्रिधा विभक्तौ त्रिबीजरूपेण ॥ १२ ॥**

**வாக³ர்தௌ² நித்யயுதௌ பரஸ்பரம் ஶக்திஶிவமயாவேதௌ ।**
**ஸ்ருஷ்டிஸ்தி²திலய பே⁴தௌ³ த்ரிதா⁴ விப⁴க்தௌ த்ரிபீ³ஜரூபேண ॥ 12 ॥**

**(பதவுரை)**

**एतौ वागर्थौ शक्तिशिवौ** = முற்கூறிய சப்தார்த்த வடிவங்களான சக்தி
**ஏதௌ வாக³ர்தௌ² ஶக்திஶிவௌ** சிவங்கள்,
**त्रिधा विभक्तौ** = மூன்று பிரகாரங்களாகப் பகுக்கப்பட்டவையாய்,
**த்ரிதா⁴ விப⁴க்தௌ**
**सृष्टिस्थितिलय भेदौ** = சிருஷ்டி, ஸ்திதி, லயங்களென்று கூறப்படும்
**ஸ்ருஷ்டிஸ்தி²திலய பே⁴தௌ³** பேதத்தோடு கூடியவையாய்,
**त्रिबीजरूपेण** = மூன்று பீஜங்களின் வடிவமாக,
**த்ரிபீ³ஜரூபேண**
**परस्परं** = (ஜடசேதனங்களாகிற சக்தி சிவங்கள்)
**பரஸ்பரம்** ஒன்றோடொன்று,

| | | |
|---|---|---|
| **नित्ययुतौ** **நித்யயுதௌ** | = | தாதாத்மிய ஸம்பந்தத்தோடு கூடினவையாய் ஆகின்றன. தாதாத்மியம் - மண்ணுங் கடமும் போலக் கற்பித பேதம் வாஸ்தவ அபேதம். |

(விரிவுரை) **त्रिबीजरूपेण த்ரிபீ[3]ஜரூபேண** வாக்பவ, காமராஜ, சக்தி பீஜங்களின் வடிவமாய் மூன்று விதமாய்ப் பகுக்கப்பட்டன. இந்த மூன்று பீஜங்களும், முறையே, சிருஷ்டி, ஸ்திதி லயமென்னும் பேதங்களோடு கூடியனவாகும். ஒவ்வொரு பீஜத்திலும் வாகர்த்தரூப சக்திசிவங்கள் விளங்குகின்றன.

**सोऽकामयत । स ईक्षत ஸோ(அ)காமயத । ஸ ஈக்ஷத**

என்னும் பிரமாணங்களின்படி ஜகத் சிருஷ்டியின் இச்சையேற்பட்டபோது பிரகாச விமர்சங்களின் ஸாமரஸ்யமான ஜகத்காரண அபராபிந்துவானது முக்குண விபாகத்தால் த்ரிகோண வடிவ மூன்று ரூபங்களாயிற்று.




1. வாக்பவம் - சிருஷ்டி, ஸரஸ்வதீபிரஹ்மா, அக்கினிமண்டலம்.
2. காமராஜம் - ஸ்திதி, லக்ஷ்மீநாராயணர், ஸூர்யமண்டலம்.
3. சக்தி - லயம் (ஸம்ஹாரம்), பார்வதீ பரமேஶ்வரர், ஸோமமண்டலம்.

**परस्परं शक्तिशिवमयौ பரஸ்பரம் ஶக்திஶிவமயௌ** - ஜடசக்தி சிவமயமாகவும், சிவம் ஜடசக்திமயமாகவும் விளங்கும் துவந்துவ நிலை; இது அந்நியோந்யாத்தியாஸமெனப்படும்.

பழுக்கக் காய்ச்சப்பட்ட இரும்புருண்டையைப் பார்க்கின், "நெருப்பு உருண்டையாயிருக்கின்றது; இரும்பு எரிக்கின்றது" என்னும் உணர்ச்சி ஏற்படுகின்றது. இவ்வுதாரணத்தில் இரும்பு நெருப்பு மயமாயும், நெருப்பு இரும்புமயமாயும் விளங்குவதறியத்தக்கது. வாக்கு - அர்த்தம் என்பவைகளே நாமரூபங்களாம். சக்திஸ்வரூபமான (வாக்கு) சப்தமே திரிகோண ரூபமாய்ப் பரிணமித்து, அதன் ஒவ்வொரு ரேகையிலும், **अ क थ அ க த[2]** என்னும் பதினாறு பதினாறு அஸ்பஷ்ட மாத்ருகைகளாலும், கோணங்களில் **ह ळ क्ष ஹ ள க்ஷ** என்னும் மூன்று வர்ணங்களாலும் கூடி விளங்குகின்றது.

சிவஸ்வரூபமான அர்த்தம் திரிகோணரூபமாய்ப் பரிணமித்த போது, சிவாதி பூம்யந்த முப்பத்தாறு தத்துவங்களின் ரூபமாய் விளங்குகின்றது. இருபத்திநான்காகப் பகுக்கப்பட்ட **ஆத்மதத்துவம்** ஒருரேகை; ஏழாகப் பகுக்கப்பட்ட **வித்யா**

**தத்துவம்** மற்றெரு ரேகை; ஐந்து பேதங்களோடு கூடிய சிவதத்துவம் மூன்றுவது ரேகை யாகும்.

நாமரூபாத்மக திரிகோணம் கற்பிதம். இதன் அதிஷ்டானம் ஸச்சிதாநந்த ஸ்வரூப பிரகாச விமர்ச ஸாமரஸ்ய பரப்பிரஹ்மாபின்ன சித்சக்தியேயாமென்பது பரம ரஹஸ்யமாம்.

சிருஷ்டிஸ்திதிலய ரூப மூன்று பீஜங்களையும், வாக் (சப்தம் - நாமம்) அர்த்த (ரூபம்) ரூப சக்திசிவபேதங்களையும், அவற்றின் அதிஷ்டானஸ்வரூபத்தில், ஒடுக்கிப் பராவடிவமாய் நிற்கவேண்டுமென்று இந்த ஶ்லோகம் கூறியதறியத்தக்கது. **(12)**

## கூடத்திரயாதிகளின் அபேத நிரூபணம்

(**அவதாரிகை**) கூடத்திரய வடிவமாயும், திரிபுடி வடிவமாயும், மற்றும் பற்பல பேத வடிவங்களாயும் பாவிக்கப்படு வனவெல்லாம் அபேத வடிவ ஒன்றே யாமென் னும் விஷயம் இந்த ஶ்லோகத்தில் பிரதிபாதிக்கப் படுகின்றது.

**माता मानं मेयं बिन्दुत्रयभिन्नबीजरूपाणि ।**
**धामत्रयपीठत्रयशक्तित्रयभेदभावितान्यपि च ॥ १३ ॥**

**மாதா மானம் மேயம் பி³ந்து³த்ரயபி⁴ன்னபீ³ஜரூபாணி ।**
**தா⁴மத்ரயபீட²த்ரயஶக்தித்ரயபே⁴த³பா⁴விதான்யபி ச ॥ 13 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **माता मानं मेयं** / **மாதா மானம் மேயம்** | = | (காரண காமகலையானது) பிரமாதா, பிரமாணம், பிரமேயங்களாகும் திரிபுடியாகவும், |
| **बिन्दुत्रयभिन्नबीजरूपाणि** / **பி³ந்து³த்ரயபி⁴ன்னபீ³ஜரூபாணி** | = | ரக்த, சுக்கில, மிச்ர பிந்துக்களாகவும், வாக்பவ, காமராஜ, சக்தி பீஜங்களாகவும் உள்ள பின்ன பின்ன வடிவங்களாகவும், |
| **अपि च** / **அபி ச** | = | அன்றியும், |
| **धामत्रय** / **தா⁴மத்ரய** | = | ஜாக்கிரஸ்வப்ன ஸுஷுப்திகளாகவும், அல்லது, ஸோம ஸூர்ய அக்கினி மண்டலங்களாகவும், |
| **पीठत्रय** / **பீட²த்ரய** | = | காமகிரி, பூர்ணகிரி, ஜாலந்தர மென்னும் மூன்று பீடங்களாகவும், |
| **शक्तित्रयभेदभावितानि** / **ஶக்தித்ரயபே⁴த³பா⁴விதானி** | = | இச்சை, ஞானம், கிரியை, யென்னும் முச்சக்திகளா கவும், இங்ஙனம் பற்பல விதங்களாகப் பாவிக்கப் |

படுவனவாயும் விளங்குகின்றது; என்றல், காரண காமகலையே மும்மூன்றுகக் கூறப்படும் பற்பல பேதங்களாய் ஆயிற்று.

**(விரிவுரை)**

**अध्यारोपापवादाभ्यां प्रपञ्चो निष्प्रपञ्च्यते**

**அத்$^4$யாரோபாபவாதா$^3$ப்$^4$யாம் ப்ரபஞ்சோ நிஷ்ப்ரபஞ்ச்யதே**

– இல்லாததைக் கற்பித்தலாகிய அத்தியாரோபத்திஞல் பிரபஞ்சத்தின் தோற்றமும், கற்பஜனயின் நீக்கமாகும் அபவாதத்திஞல் மித்தியா பிரபஞ்சத்தின் நாசமும் உண்டா கின்றன. அத்தியாஸ நிவர்த்தியே அதிஷ்டானவடிவ ஸ்வஸ்வரூப நிச்சயமாகும்.

ஆதலின், முன் அவித்தியாபாதத்தில் ஆத்மஸ்வரூபத்தில் ஆரோபிக்கப்பட்ட ஜகத், ஜீவ, பர பாவங்களின் அபவாதத்தின் பொருட்டே இந்த வித்தியாபாதம் ஆரம் பிக்கப்பட்டது.

ஜகஜீவபரங்களின் பேதம் ஆரோபமும், அவற்றின் அபேதவுணர்ச்சி அபவாத மும்மாகும். **(13)**

## திரிபுடித் தோற்றம்.

**(அவதாரிகை)** இதில் திரிபுடித் தோற்றமும், அதன் அபவாதமும் கூறப்படு கின்றன.

**तेषु क्रमेण लिङ्गत्रितयं तद्वच्च मातृकात्रितयम् ।**
**इत्थं त्रितयपुरी या तुरीयपीठा च भेदिनी विद्या ॥ १४ ॥**

**தேஷு க்ரமேண லிங்க$^3$த்ரிதயம் தத்$^3$வச்ச மாத்ருகாத்ரிதயம் ।**
**இத்த$^2$ம் த்ரிதயபுரீ யா துரீயபீடா$^2$ ச பே$^4$தி$^3$னீ வித்$^3$யா ॥ 14 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **तेषु** தேஷு | = | அந்த மூன்று பீஜங்களில், |
| **क्रमेण** க்ரமேண | = | முறையே, |
| **लिङ्गत्रितयं** லிங்க$^3$த்ரிதயம் | = | ஸ்வயம்புவாதி மூன்று, லிங்கங்களும், அல்லது, பிரம்மா விஷ்ணு ருத்திரன் என்னும் மும்மூர்த்தி களும், |

| | | |
|---|---|---|
| **तद्वच्च** | = | அங்ஙனமே, |
| **தத்³வச்ச** | | |
| **मातृकात्रितयम्** | = | **अ क थ அ க த²** என்னும் மூன்றுமாத்ருகைகளும், |
| **மாத்ருகாத்ரிதயம்** | | |
| **इत्थं** | = | இங்ஙனமே, |
| **இத்த²ம்** | | |
| **या** | = | எந்த பராசக்தி, |
| **யா** | | |
| **त्रितयपुरी** | = | மூன்றென்னும் ஸங்கியையுள்ள காரியத்தொகுதி |
| **த்ரிதயபுரீ** | | யான சரீரத்தை யுடைத்தாய் விளங்குகின்றன ளோ, அவளே, |
| **तुरीयपीठा च** | = | நான்காவதான அதிஷ்டான காரணஸ்வரூபமா |
| **துரீயபீடா² ச** | | யிருந்துகொண்டு, |
| **भेदिनी विद्या** | = | நாநாவாய் விளங்கும் பிரபஞ்சோல்லாஸ வடிவ |
| **பே⁴தி³னீ வித்³யா** | | மாயும், அதைப் பேதிக்கும் அகண்ட அபேதத்தை யுணர்த்தும் ஞானமாயும் விளங்குகிருள். |

**(தாதபர்யம்)** அத்தியாரோபத்திஞல் அத்விதீயமாயுள்ளவொன்றே இரண்டாக வும், மூன்ருகவும், பலவாகவும் தோன்றுகின்றது. இந்தத் தோற்றத்தை யபவாத யுக்தியைக்கொண்டு பேதித்து "ஏகமாயுள்ள நிஜேதான் உண்மை" யென்று தீர்மானம் செய்தல் வேண்டும்.

இந்த விவேகந்தான் வித்தையென்னும் பெயரால் விவகரிக்கப்படுகின்றது. இந்த ஜகத்தானது திரிபுடீ ரூபமாய்த் தோன்றுகின்றது.

இவ்விஷயந்தான் 12, 13, 14 ஸ்லோகங்களில் கூறப்பட்டுள்ள தன் திரண்ட பொருளாகும்.

இங்ஙனம், எந்த சிவாபின்ன சித்சக்தியானது மூன்றென்னும் ஸங்கியைகளே யுடைய சரீரங்க (புரங்க) ளேப்பெற்று விளங்கினும், அவை யதிஷ்டானமாகும் துரீய த்திற்குப் பின்னப்பட்டதன்று எனத் திடமாய்த் தெரிந்து தெளிவதே தத்துவஞான மாகும். **(14)**

## ஸூக்ஷ்ம பஞ்சபூதங்களின் விவரணம்.

**शब्दस्पर्शौ रूपं रसगन्धौ चेति भूतसूक्ष्माणि ।**
**व्यापकमाद्यं व्याप्तं तूत्तरमेवं क्रमेण पञ्चदश ॥ १५ ॥**

**ஶப்³த³ஸ்பர்ஶௌ ரூபம் ரஸக³ந்தௌ⁴ சேதி பூ⁴தஸூக்ஷ்மாணி ।**
**வ்யாபகமாத்³யம் வ்யாப்தம் தூத்தரமேவம் க்ரமேண பஞ்சத³ஶ ॥ 15 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **शब्दस्पर्शौ** ஶப்³த³ஸ்பர்ஶௌ | = | சப்தமும், ஸ்பர்சமும், |
| **रूपं** ரூபம் | = | ரூபமும், |
| **रसगन्धौ चेति** ரஸக³ந்தௌ⁴ சேதி | = | ரஸம், கந்தம் என்னும் இரண்டும் ஆக ஐந்தும் சேர்ந்து, |
| **भूतसूक्ष्माणि** பூ⁴தஸூக்ஷ்மாணி | = | ஸூக்ஷ்ம பூதங்களேனப்படும், (இவற்றில்) |
| **व्यापकमाद्यं** வ்யாபகமாத்³யம் | = | முன் முன்னுள்ளது வியாபகமும், |
| **व्याप्तं तूत्तरं** வ்யாப்தம் தூத்தரம் | = | பின் பின்னுள்ளது வியாப்பியமுமாகும், |
| **एवं क्रमेण** ஏவம் க்ரமேண | = | இவ்வாறுக, |
| **पञ्चदश** பஞ்சத³ஶ | = | பதிஐனந்து. |

**குறிப்பு**: - ஸூக்ஷ்ம பூதங்களே தன்மாத்திரைகள். இவை பூதங்களின் குணங்க ளாகவும் விவகரிக்கப்படும். பஞ்சபூதங்களிலும் உள்ள குணங்கள் பதிஐனந்தாகும்.

**(விரிவுரை)**

**गन्धवती पृथिवी; शब्दगुणकमाकाशं**
**க³ந்த⁴வதீ ப்ருதி²வீ; ஶப்³த³கு³ணகமாகாஶம்**

கந்த குணமுடையது பிரிதிவி; சப்தத்தைக் குணமாகவுடையது ஆகாசம். என்பன லக்ஷணவாக்கியங்களாகும்.

சிருஷ்டிக் கிரமத்தின்படி ஆகாசம் முதலில் தோன்றிற்று. அதனின்று வாயுவும், அதனின்று அக்கினியும், அதனின்று ஜலமும், அதனின்று பிரிதிவியும் தோன்றின. ஒவ்வொரு பூதத்திலும் அதனுடைய குணத்தோடு காரண பூதத்தின் குணமும் உண்டு. அதன் விவரமாவது: -

| பூதம் | தன்னுடையகுணம் | காரணகுணம் |
|---|---|---|
| ஆகாசம் | 1. சப்தம் | - |
| வாயு | 2. ஸ்பர்சம் | சப்தம். |
| அக்கினி | 3. ரூபம். | ஸ்பர்சம், சப்தம் |
| ஜலம் | 4. ரஸம் | ரூபம், ஸ்பர்சம், சப்தம் |
| பூமி | 5. கந்தம் | ரஸம், ரூபம், ஸ்பர்சம், சப்தம் |
| | **15** | |

## வியாபக - வியாப்திகளின் விமர்சமாவது: - வியாபகம் - அதிகதேச அதிககாலத்திலுள்ளது.

**வியாப்தம்** - குறைந்த தேச குறைந்த காலத்துள்ளது.

சிருஷ்டிக் கிரமத்தில் ஆகாசம் தோன்றியபின் வாயு முதலிய இதர பூதங்கள் தோன்றியிருப்பதால், வாயு முதலிய காரிய பூதங்களைவிடக் காரணபூதமான ஆகாசம் வியாபகம். அங்ஙனமே சப்தம் எல்லாப்பூதங்களிலும் வியாபித்துள்ளது. சப்தகுணகமான ஆகாசத்தில் ஸ்பர்சம் இல்லாமையால் ஸ்பரிசம் வியாப்தம்.

இங்ஙனமே மற்ற குணங்களிலும் அறிந்துகொள்க.

**குறிப்பு:** - நிரபேக்ஷிக வியாபகத்துவம் சைதன்னியத்திற்கேயுள்ளது; ஸாபேக்ஷிக வியாபகத்துவம் ஜடத்திற்குள்ளது. ஆகாசம் ஜடமாதலின், அதற்கு நிரபேக்ஷிக வியாபகத்துவம் இல்லை; அதன் வியாபகம் ஸாபேக்ஷிகமேயாகும். ஸ்பர்சாபேக்ஷையால் சப்தத்திற்கு வியாபகத்துவமுண்டு, இங்ஙனமே, ரூபாபேக்ஷையால் ஸ்பர்சத்திற்கும், ரஸாபேக்ஷையால் ரூபத்திற்கும், கந்தாபேக்ஷையால் ரஸத்திற்கும் வியாபகத்துவமுண்டு. கந்தம் வியாப்தமேயாகும். **(15)**

## ஸ்ரீவித்யா பஞ்சதசாக்ஷரீ ஆவிர்ப்பாவம்.

(**அவதாரிகை**) மேற்கூறிய பஞ்ச தன்மாத்திரைகளின் பதினைந்து குணங்களினின்றும் ஸ்ரீமத்பஞ்சதசாக்ஷரீ வித்தை யாவிர்ப்பவித்ததெனக் கூறப்படுகின்றது.

**पञ्चदशाक्षररूपा नित्या चैषा हि भौतिकाभिमता ।**
**नित्याः शब्दादिगुणप्रभेदभिन्नास्तथानया व्याप्ताः ॥ १६ ॥**

**பஞ்சத³ஶாக்ஷரரூபா நித்யா சைஷா ஹி பௌ⁴திகாபி⁴மதா ।**
**நித்யா: ஶப்³தா³தி³கு³ணப்ரபே⁴த³பி⁴ன்னாஸ்ததா²னயா வ்யாப்தா: ॥ 16 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **एषा** | = | இந்த சித்சக்தியானவள், |
| **ஏஷா** | | |
| **हि** | = | எந்தக் காரணத்திஞல், |
| **ஹி** | | |
| **भौतिकाभिमता** | = | குணங்களோடுகூடிய தன் மாத்திரைகளின் ஸம்பந் |
| **பௌ4திகாபி4மதா** | | தினியாய் அங்கீகரிக்கப்பட்டனளோ, அந்தக் காரண த்தால், |
| **पञ्चदशाक्षररूपा** | = | பதிஞைந்து பீஜாக்ஷரவடிவினளாயும், |
| **பஞ்சத3ஶாக்ஷரரூபா** | | |
| **नित्या च** | = | கூடஸ்த மஹாநித்தியா ஸ்வரூபிணியாயுமாகின் |
| **நித்யா ச** | | றனள். |
| **शब्दादिगुणप्रभेदभिन्ना:** | = | சப்தாதி குணங்களின் பேதத்தால் பின்ன |
| **ஶப்3தா3தி3கு3ணப்ரபே4த3பி4ன்ன:** | | பின்னமாய் விளங்கும், |
| **नित्या:** | = | காமேஶ்வரி, பகமாலினி முதலிய பதிஞைந்து |
| **நித்யா:** | | நித்தியாதேவிகளும், |
| **तथा** | = | அங்ஙனமே, |
| **ததா2** | | |
| **अनया** | = | கூடஸ்த மஹா நித்தியையாகும் ஷோடசீ |
| **அனயா** | | நித்தியை (திரிபுரஸுந்தரி) யால், |
| **व्याप्ता:** | = | வியாபிக்கப்பட்டவர்களா யாகின்றனர். |
| **வ்யாப்தா:** | | |

**(விரிவுரை)** எங்ஙனம், முன்ஶ்லோகத்தில் சப்தம் வியாபகமும், மற்றவை வியாப்தங்களாகவும் கூறப்பட்டதோ, அங்ஙனமே, இந்த ஶ்லோகத்திலும், கூடஸ்த மஹாநித்தியாஸ்வரூப திரிபுரஸுந்தரி வியாபகமும், காமேஶ்வரி முதல் சித்திரை யீருகவுள்ள பதிஞைந்து நித்தியைகளும் வியாப்தமுமாவர். இந்த விஷயத்தை **तथा ததா2** என்னும் பதம் ஸூசிப்பிக்கின்றது.

முன்னர் பதிஞேராவது ஶ்லோகத்தில், வித்தைக்கும் அதிதேவதைக்கும் அபேதம் கூறப்பட்டது. **एषा भौतिकाभिमता ஏஷா பௌ4திகாபி4மதா** என்று கூறப் பட்டதஞல், தன்மாத்திரைகளின் ஸமஷ்டியான பதிஞைந்து குணங்களினின்றும் ஸ்ரீமத் பஞ்சதஶாக்ஷரீ வித்தையின் பீஜாக்ஷரங்கள் தோன்றின வென்றேற்படு கின்றது. ஆதலின், பஞ்ச தன்மாத்திரைகளின் ஸமஷ்டிக்கும், ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ வித்தைக்கும் அபேத மென்பது தெளிவாகின்றது.

பதிஞைந்து பீஜங்களும் பதிஞைந்து நித்தியைகளின் வாசகங்களாயும் இருப்பத ஞல், பஞ்சதஸாக்ஷரீ வித்தைக்கும் நித்தியைகளுக்கும் அபேதம். வாச்சிய வாசக

ரூப நித்தியைகளும், பீஜங்களும், லக்ஷ்யமான ஷோடசீஸ்வரூப சித்சக்தியினின் றும் தோன்றியவை யாதலின், அவ்வதிஷ்டான காரண **சித்கலையில்** அவை தாதாத் மியத்தையடைகின்றன. இது ரஹஸ்யமாம்.

**तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः**

**தஸ்மாத்[3]வா ஏதஸ்மாதா[3]த்மன ஆகாஶ: ஸம்பூ[4]த:** என்னும் பிரமாணத்தின்படி

**तस्माद्वा एतस्मात्**

**தஸ்மாத்[3]வா ஏதஸ்மாத்**

என்று கூறப்பட்டதனுல், ஆத்மாவிலிருந்து அவ்வியக்தம், அதிலிருந்து மஹத்தத்து வம், அதிலிருந்து அஹங்காரம் தோன்றின.

ஆத்மா நிர்க்குணம், நிரம்சம், நித்தியம். அதனின்று முண்டான அவ்வியக்தம் குணத்திரயமிளிதமானது. அதனின்றும் தோன்றின மஹத்தத்துவம் ஸ்பஷ்டா ஸ்பஷ்டமானது, அதனின்றும் தோன்றின அஹங்காரம் ஸ்பஷ்டமான ரூபமுடை யது. இந்த அஹங்காரம் குணத்திரவியாபகத்தை யடைந்தபோதுதான் திரிபுடியின் ஆவிர்ப்பாவம்,

ஆத்மாவிலிருந்து ஆகாசாதிகள் உண்டாயினவென்று கூறும் சுருதி வாக்கியத் திற்கு, அவ்வியக்த, மஹத்தத்துவ, அஹங்காராதிகளாய் விளங்கும் ஆத்மாவினி ன்று தான் ஆகாசாதிகள் தோன்றின வென்பது தாத்பரியமாம்.

ஆதலின் **ஸர்வகாரண காரணமாகும் ஆத்மாதான்** மஹாநித்யையாகும். இதுவே ஷோடசீகலை.

ஆகாசாதி பஞ்சபூதங்களின் தோற்றத்திற்குக் காரணமாகும் ஆத்ம ஸ்வரூபத் திற்கு அஹங்காரம் ஸ்தூலோபாதியும், மஹத்தத்துவம் ஸூக்ஷ்மோபாதியும், அவ்வியக்தம் காரணோபாதியுமாகின்றன. பிந்துவே ஆத்மா; திரிகோணம் ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரணோபாதிகள். சப்ததன்மாத்திரைகள் ஐந்து, ஸ்பர்ச தன்மாத்திரைகள் நான்கு, ரூபதன் மாத்திரைகள் மூன்று, ரஸ தன்மாத்திரைகள் இரண்டு, கந்த தன்மாத்திரை ஒன்று ஆகப் பதினைந்தும் பஞ்சதச பீஜங்களோடுகூடிய ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ வித்தையாகும். இவையே பஞ்சதசதிதிநித்தியைகள். இந்த நித்தியை கள் பதினைந்துபேருக்கும் விருத்தி (வளர்வு) க்ஷயங் ( தேய்வு) களுண்டு. **(16)**

## நித்தியைகளின் விமர்சம்.

**नित्यास्तिध्याकारास्तिथयः शिवशक्तिसमरसाकाराः ।**
**दिवसनिशामय्यस्ताः श्रीवर्णास्तेऽपि तद्द्वयीरूपाः ॥ १७ ॥**

**நித்யாஸ்தித்[4]யாகாராஸ்தித[2]ய: ஶிவஶக்திஸமரஸாகாரா: ।**
**தி[3]வஸநிஶாமய்யஸ்தா: ஶ்ரீவர்ணாஸ்தே(அ)பி தத்[3]த்[3]த்[3]வயீரூபா: ॥ 17 ॥**

**(பதவுரை)**

**नित्याः** = முற்கூறிய பதினைந்து நித்தியைகளும்,

**நித்யா:**

**तिध्याकाराः** = பிரதமை முதல் பௌர்ணமி வரையிலுள்ள

**தித்$^4$யாகாரா:** பதினைந்து திதிகளின் வடிவமாயுள்ளவர்கள்,

**तास्तिथयः** = இந்த பதினைந்து திதிகளும்,

**தாஸ்தித$^2$ய:**

**दिवसनिशामय्यः** = பகல் இரவு மயமாய் விளங்குகின்றன,

**தி$^3$வஸநிஶாமய்ய:** அன்றியும்,

**शिवशक्तिसमरसाकाराः** = சிவசக்தி ஸாமரஸ்ய வடிவமானவை,

**ஶிவஶக்திஸமரஸாகாரா:**

**ते श्रीवर्णा अपि** = ஸ்ரீவித்யையின் பதினைந்து அக்ஷரங்களும்,

**தே ஸ்ரீவர்ணா அபி**

**तद्द्वयीरूपाः** = முற்கூறிய அஹோராத்ர வடிவமாகவும் சிவசக்தி

**தத்$^3$த்$^3$த்$^3$வயீரூபா:** ஸாமரஸ்யவடிவமாகவும் விளங்குகின்றன. ஆதலின், நித்யைகளும், பஞ்சதசியின் வர்ணங்களும் அஹோராத்திர ஸ்வரூபிணிகளாகவும், சிவசக்தி ஸாமரஸ்யவடிவினராகவும் விளங்குகின்றனர்.

**(விரிவுரை)** பஞ்சதசீ வித்தையிலுள்ள ஒவ்வொரு அக்ஷரமும் ஒவ்வொரு நித்தியையைக் குறிக்கும்.

ஒவ்வொரு நித்யையும் பகலில் பிரகாசரூப சிவாத்மகமாகவும், இரவில் விமர்சவடிவ சக்தியாத்மகமாகவும் விளங்குவது அறியத்தக்கது.

ஸ்ரீவித்தையின் பதினைந்து பீஜங்கள் பாஞ்சபௌதிகப் பிரபஞ்சவடிவமாய் இருப்பதோடு கால ஸ்வரூபமாகவும் விளங்குகின்றன வென்பது இதில் பிரதிபாதிக் கப்பட்டுள்ள விஷயமாகும். காலாதிஷ்டான தேவதைகள் தான் திதிநித்தியைகள். கால தேசாதிகள் யாவும் சிவாபின்ன சித்சக்தியில் கற்பனையாகும். **(17)**

## பஞ்சதசீவித்தைக்கு விஸ்வாத்மகத்துவமும், விஶ்வோத்தீர் ணத்துவமும் கூறப்படுகின்றன.

**अज्व्यञ्जनविन्दुत्रय समष्टिभेदैर्विभाविताकारा।**
**षट्त्रिंशत्तत्वात्मा तत्वातीता च केवला विद्या ॥ १८ ॥**

**அஜ்வ்யஞ்ஜனவிந்து$^3$த்ரய ஸமஷ்டிபே$^4$தை$^3$ர்விபா$^4$விதாகாரா।**
**ஷட்த்ரிம்ஶத்தத்வாத்மா தத்வாதீதா ச கேவலா வித்$^3$யா ॥ 18 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **अचः** | = | உயிர் எழுத்துக்கள் (ஸ்வரங்கள்), |
| **அச:** | | |
| **व्यञ्जनानि** | = | மெய்யெழுத்துக்கள், |
| **வ்யஞ்ஜனனி** | | |
| **बिन्दुत्रयं** | = | மூன்று அநுஸ்வாரங்கள், ஆகிய இவைகளின் |
| **பி³ந்து³த்ரயம்** | | வியஷ்டியும், |
| **समष्टिभेदैः** | = | ஸமஷ்டியுமான பேதத்தால், |
| **ஸமஷ்டிபே⁴தை³:** | | |
| **विभाविताकारा** | = | நன்கு பாவிக்கப்பட்ட ஸ்வரூபமுடையனவாய், |
| **விபா⁴விதாகாரா** | | |
| **षट्त्रिंशत्तत्वात्मा** | = | முப்பத்தாறு தத்துவாத்மகமாயும், |
| **ஷட்த்ரிம்ஶத்தத்வாத்மா** | | |
| **तत्वातीता च** | = | அத்தத்துவங்களுக்கு அதீதமானதாயும், |
| **தத்வாதீதா ச** | | |
| **केवला** | = | அத்விதீயமாயும் விளங்குவது, |
| **கேவலா** | | |
| **विद्या** | = | ஸ்ரீமத்பஞ்சதசாக்ஷரீ மஹாவித்தையாகும். |
| **வித்³யா** | | |

**(விரிவுரை)** உயிரெழுத்துக்கள், மெய்யெழுத்துக்கள், அநுஸ்வாரங்கள் என்னும் பேதத்திஞல் மஹாவித்தையில் வியஷ்டியாய்ப் பிரிதிவி முதல் சிவாந்த மான முப்பத்தாறு தத்துவாத்மகத்துவமும், ஸமஷ்டியாய்த் தத்துவா தீதஸ்வரூப மும் ஸூசிப்பிக்கப்படுகின்றன.

**குறிப்பு:** - இந்நூலாசிரியர் **ஸ்ரீமத் புண்ணியாநந்தநாதர்** ஹாதிவித்யோபாஸ கராதலின், அந்த ஹாதி வித்தைக்கே இத்தகைய விமர்சத்தைச் செய்கின்ருரென்பத றியத்தக்கது.

அதன் விளக்கமாவது: - ஹாதிவித்தை: -

முதல் கூடம் = **ह् +अ+ स्+अ+क्+अ+ल् +अ+ ह+र्+ ई+म्**

**ஹ்+ அ+ ஸ்+ அ+ க்+அ+ல்+அ+ஹ+ர்+ஈ+ம்**

= உயிர் 5. மெய் 6. பிந்து 1. ஆக 12.

இரண்டாவது கூடம் = **ह्+अ+स्+अ+क्+अ+ह्+अ+ल्+अ+ह्+र्+ई+म्**

**= ஹ்+அ+ஸ்+அ+க்+அ+ஹ்+அ+ல்+அ+ஹ்+ர்+ஈ+ம்**

மெய் 7. பிந்து 1. ஆக 14.

மூன்றுவது கூடம் =**स्+अ+क्+अ+ल्+अ+ह्+र्+ई+म्**

**ஸ்+அ+க்+அ+ல்+அ+ஹ்+ர்+ஈ+ம்**

= உயிர் 4. மெய் 5. பிந்து 1 == ஆக 10.

ஆக மூன்று கூடங்களிலும் சேர்ந்து உயிர் 15, மெய் 18, பிந்துக்கள் 3. ஆக முப்பத்தாறு வர்ணங்கள். இவை தனித்தனியாய் முப்பத்தாறு தத்துவங்களையும், ஸமஷ்டியாய்த் தத்துவாதீத ஸ்வரூபத்தையும் தெரிவிக்கின்றன.

இத்தகைய விமர்சம் காதி வித்தையில் பொருந்துவதில்லை.

இதற்கு வியாக்கியானம் செய்த **ஸ்ரீநடநாநந்த நாதர்**

இது **காதிவித்தைக்கும்** பொருந்தும் என்று கூறியிருக்கின்றனர். எங்ஙனம் பொருந்துமென்பது நன்கு விளக்கப்படவில்லை.

காதிவித்தையில் இந்த ஶ்லோகம் பொருந்தாத பாகம் **வாக்பவகூட** மேயா கும். காதிவித்யா வாக்பவ (முதல்) கூடத்தில்

**क्+अ+ए+ई+ल्+अ+ह्+र्+ई+म्**

**க்+அ+ஏ+ஈ+ல்+அ+ஹ்+ர்+ஈ+ம்**

உயிர் 5. மெய் 4. பிந்து 1. ஆக 10 வர்ணங்கள்தான் இருக்கின்றன. ஆதலின் ஹாதி வித்தைக்கும், காதி வித்தைக்கும் முதல் கூடத்தில் இரண்டு வர்ணங்கள் வித்தியா ஸம். ஆதலின் **ஸ்ரீபாஸ்கரராயர்**, வரிவஸ்யாரஹஸ்யத்தில் (II-27) ஒவ்வொரு கூடத் திலும் பிந்துவோடு ஒவ்வொரு நாதத்தையும் சேர்த்து முப்பத்தேழென்று கூறி, அவற்றில் முப்பத்தேழாவது தத்துவாதீதஸ்வரூபமென்று கூறியுள்ளார். முப்பத்தே ழாவது முதல் கூடத்திலுள்ள ஏகாரமே யாகும்.

**ரஹஸ்யாகமம்**, **தத்துவ விவேகம்** முதலிய கிரந்தங்களில் தத்துவாதீத ஸ்வரூபம் சக்தி கூடத்திலுள்ள நாதமாகுமென்று கூறப்பட்டுள்ளது. அந்தியகூட நாத மெனின், பிந்து முதல் உன்மநீ, வரையிலுள்ள ஒன்பது வர்ணங்களையும் அதிக்கிர மித்து விளங்கும் ஸ்தான மென்றறியத்தக்கது. காதி வித்தையில் ஒவ்வொரு கூடத் திற்கும் உயிர், மெய் எழுத்துக்களின் கணக்கின் விவரம்: -

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வாக்பவம் - | உயிர் 5 | காமராஜம் - | உயிர் | சக்தி - | உயிர் 4 |
| | மெய் 4 | | மெய் 7 | | மெய் 5 |
| | பிந்து 1 | | பிந்து 1 | | பிந்து 1 |
| | நாதம் 1 | | நாதம் 1 | | நாதம் 1 |
| | **11** | | **15** | | **11** |

ஆக மொத்தம் **37**.

இவற்றுள் முப்பத்தாறு தத்துவங்களும், ஒன்று தத்துவாதீத ஸ்வரூபமு மாகும்.

**यस्य यस्य पदार्थस्य या या शक्तिरुदाहृता ।**
**सा सा सर्वेश्वरी देवी स सर्वोऽपि महेश्वरः ॥**
**व्याप्ता पञ्चदशार्णैषा विद्या भूतगुणात्मिका ।**
**पञ्चभिश्च तथा षभिश्चतुर्भिरपि चाक्षरैः ॥**
**स्वरव्यञ्जनभेदेन सप्तत्रिंशत्प्रभेदिनी ।**
**सप्तत्रिंशत्प्रभेदेन षट्त्रिंश तत्वरूपिणी ।**
**तत्वातीतस्वरूपा च विद्यैषा भाव्यते सदा ॥**

**யஸ்ய யஸ்ய பதா3ர்த2ஸ்ய யா யா ஶக்திருதா3ஹ்ருதா ।**
**ஸா ஸா ஸர்வேஶ்வரீ தே3வீ ஸ ஸர்வோ(அ)பி மஹேஶ்வர: ॥**
**வ்யாப்தா பஞ்சத3ஶார்ணைஷா வித்3யா பூ4தகு3ணாத்மிகா ।**
**பஞ்சபி4ஶ்ச ததா2 ஷபி4ஶ்சதுர்பி4ரபி சாக்ஷரை: ॥**
**ஸ்வரவ்யஞ்ஜனபே4தே3ன ஸப்தத்ரிம்ஶத்ப்ரபே4தி3னீ ।**
**ஸப்தத்ரிம்ஶத்ப்ரபே4தே3ன ஷட்த்ரிம்ஶ தத்வரூபிணீ ।**
**தத்வாதீதஸ்வரூபா ச வித்3யைஷா பா4வ்யதே ஸதா3 ॥**

(வாமகேஶ்வர தந்த்ரம் VII. 31-33)

என்னும் பிரமாணத்தின்படி, எந்த எந்த வஸ்துக்களுக்கு என்ன என்ன ஸாமர்த்தியமுள்ளதோ, அது அது, பராசக்தியின் வடிவமாகும். இந்த பராசக்தி மஹேஶ்வரனுக்குப் பின்னமல்லாதவளே. முப்பத்தாறு தத்துவங்களின் வடிவ ஸர்வப்பிரபஞ்ச ஸமஷ்டி ஸாமர்த்திய வடிவினளான இந்த பராசக்தியானவள் பஞ்ச பூதங்களின் குணங்களினின்றும் அபிவியக்தமான ஸ்ரீமத் பஞ்சதசாக்ஷரீ மஹாவித்தையால் குறிப்பிடப்படுகின்றனள்.

இவ்வித்தையானது, முறையே ஐந்து, ஆறு, நான்கென்று கூறப்படும் அக்ஷர ஸங்கியையையுடைய மூன்று கூடங்களாகவும், உயிர், மெய் பேதத்தால் முப்பத்தேழு அக்ஷரங்களோடு கூடியதாகவும் விளங்குகின்றது. இந்த முப்பத்தேழு அக்ஷரங்கள் முப்பத்தாறு தத்துவ வடிவமாயும், அவற்றிற்கு அதீதமாயும் பாவிக்கப்படுகின்றன. இது **காதி வித்தைக்கு அநுஸாரிணியான பிரமாணமாகும்**.

**விசேஷக்குறிப்பு:** -

1. வித்தைக்கும் அதன் அதிஷ்டான தேவதைக்கும் அபேதம் கூறப்பட்டது.
2. வித்தைக்கும் முப்பத்தாறு தத்துவ வடிவ பிரபஞ்சத்திற்கும் அபேதம் கூறப்பட்டது; ஆதலின் வித்தியாதிஷ்டான தேவதையாகும் சித்சக்தியும் பிரபஞ்ச அபின்ஜனயேயாவள்.

பிரபஞ்சம் அண்டபிண்ட வடிவம். அண்டபிண்டங்களுக்கு பேதமின்மை பிரஸித்தம்.

ஆதலின் உபாஸகனுகும் பிண்டத்திற்கும் வித்தைக்கும் பேதமில்ஐல.

இங்ஙனம் வித்யை, பிரபஞ்சம், உபாஸகன், தேவதை இவற்றின் அபேதத்தை யுணர்தல் அத்தியாவசியம். இதற்குத்தான் **சதுர்வித ஐக்கிய**மென்று சாஸ்திரம் கூறும். **(18)**

## தேவிக்கும் பிரபஞ்சவடிவமாந்தன்மையும், பிரபஞ்சாதீதத் தன்மையும் கூறுதல்.

**विद्यापि तादृगात्मा सूक्ष्मा सा त्रिपुरसुन्दरी देवी ।**
**विद्यावेद्यात्मकयोरत्यन्ताभेदमामनन्त्यार्याः ॥ १९ ॥**

**வித்3யாபி தாத்3ருகா3த்மா ஸூக்ஷ்மா ஸா த்ரிபுரஸுந்த3ரீ தே3வீ ।**
**வித்3யாவேத்3யாத்மகயோரத்யந்தாபே4த3மாமனந்த்யார்யா: ॥ 19 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **विद्या** வித்3யா | = | ஞானஸ்வரூபிணியும், |
| **सूक्ष्मा** ஸூக்ஷ்மா | = | அபரிச்சேத்யையும், |
| **देवी** தே3வீ | = | ஸ்வயம்பிரகாச ரூபிணியும் ஆன, |
| **सा त्रिपुरसुन्दरी अपि** ஸா த்ரிபுரஸுந்த3ரீ அபி | = | ஸர்வவேதாந்தங்களிலும் மிகப் பிரஸித்தையான அந்த திரிபுரஸுந்தரீ தேவியுங்கூட, |
| **तादृगात्मा** தாத்3ருகா3த்மா | = | தத்துவாத்மகமாயும் தத்துவாதீதமாயும் விளங்கும் ஸ்வரூபத்தையுடையவளாவள்; ஆதலின், |
| **आर्याः** ஆர்யா: | = | ஆத்மஞானிகள், |
| **विद्यावेद्यात्मकयोः** வித்3யாவேத்3யாத்மகயோ: | = | ஸ்ரீமத் பஞ்சதசீவித்தைக்கும், அதனுல் அறியப்படும் அதிஷ்டான மஹாத்ரிபுரஸுந்தரீ தேவிக்கும், |
| **अत्यन्ताभेदं** அத்யந்தாபே4த3ம் | = | ஸார்வகாலிக அபேதத்தை, |
| **आमनन्ति** ஆமனந்தி | = | ஸித்தாந்தம் செய்கின்றுர்கள். |

**(விரிவுரை)** வித்தியாபாதத்தின் ஆரம்பமாகும் பதினேராவது ஶ்லோகத்தில்

**विद्यादेवतयोरपि न भेदलेशोऽस्ति वेद्यवेदकयोः**

**வித்3யாதே3வதயோரபி ந பே4த3லேஸோ(அ)ஸ்தி வேத்3யவேத3கயோ:**

என்று உபக்கிரமிக்கப்பட்டு, இந்த அபேதம் உபஸம்ஹாரம் செய்யப்படுகின்றது; ஆதலின், இதில் வித்தியாபாதத்தின் முடிவு ஸூசிப்பிக்கப்படுவதறியத்தக்கது.

**विद्यावेद्यात्मकयोः வித்3யாவேத்3யாத்மகயோ:** - வித்தையும் அவ்வித்தையால் அறியப்படும் தேவதையும், என்றல், ஞானமும் ஞேயமும் கொள்ளத்தக்கது; உபலக்ஷணமாய் ஞாதாவும் கொள்ளத்தக்கது. ஞாதா, ஞானம், ஞேயமென்னும் திரிபுடியில் ஒன்றுக்கொன்று அபேதமென்பது ஸித்திக்கின்றது.

**अत्यन्ताभेदं அத்யந்தாபே4த3ம்** - முற்றும் அபேதம். பேதமானது கால தேச வஸ்து பரிச்சேதங்களால் ஏற்படக்கூடிய வொரு கல்பிதவுணர்வாகும். பேதத்தின் அத்தியந்த அபாவத்திற்கு அத்தியந்த அபேதமென்றுபெயர். எப்பொழுதும், எங்கும், எதிலும் பேதமேயில்லையென்பது திரண்டபொருளாகும். நாமம், ரூபம், காலம், தேசம் முதலியன பேதவுணர்ச்சிக்கு உபாதிகளாம். உபாதி நீக்கத்தில் பேதமே கிடையாது.

ஜீவன்முக்த ஞானிகளாகிய ஆரியர்கள் ஸதா அபேத தரிசிகளாதலின், அவர்கள் அபேதத்தையே பிரதிபாதனம் செய்கின்றனர்.

**வித்யா விஷயமாய்ச் சில விஷயங்கள் இங்கே விமர்சிக்கப்படுதல் அவசியம்.**

வித்யையென்பது ஸ்ரீவித்தை அல்லது பிரஹ்மவித்தையாகும். இது உபநிஷத்துக்களில் பிரதிபாதிக்கப்பட்டுள்ளது. பொதுவாய்ப் **பஞ்சதசாக்ஷரியை** ஸ்ரீவித்தையென்று கூறினும், ஏகாக்ஷரியாகும் **புவனேஶ்வரி - காமக**லை, **த்ரியக்ஷரி** (பாலை), **நவாக்ஷரி** (சண்டி), **ஷோடசி, மஹா ஷோடசி** முதலியவைகளும் ஸ்ரீவித்தையில் சேர்ந்தவையேயாகும்.

**புவனேஶ்வரீ** வித்தையாகும் ஏகாக்ஷரம் தேவீ உபநிஷத்தில் நன்கு பிரதிபாதிக்கப்பட்டுள்ளது.

**காமகலாவித்தையையும்** உபநிஷத் பிரதிபாத்தியமே.

பாலை - மூன்று பீஜங்களோடுகூடியதென்பது மிகப் பிரஸித்தமாயினும், ஷடக்ஷரியாய்த்தான் ஆசரணையில் இருக்கின்றது.

**நவாக்ஷரி** - இதன் உத்தாரம் தேவீ உபநிஷத்தில் கூறப்பட்டுள்ளது. **ஸப்தசதி** யென்னும் ஸ்ரீதேவீமாஹாத்மியம் முழுமையும் இந்த நவாக்ஷரி வித்தையின் அதிஷ்டான தேவியைப்பற்றிக் கூறுவதேயாகும்.

**ஷோடசீவித்தை** - இதுஸ்ரீமத் பஞ்சதசீ வித்தையின் கடைசியில் லக்ஷ்மீ பீஜத்தைச் சேர்ப்பதால் ஏற்படுவதாகும். இது **லகுஷோடசி**யென்று கூறப்படும்.

**மஹாஷோடசி** - இது இருபத்தெட்டு பீஜங்களோடு கூடி விளங்குவது. இது ஸர்வோத்க்ருஷ்டமானது.

**विद्या ह्यष्टाविंशतिवर्णमयी**

**வித்³யா ஹ்யஷ்டாவிம்ஶதிவர்ணமயீ**

என்பது **ஸ்ரீகௌடபாத ஸூத்ர**மாகும். இதன் உத்தாரம் தந்த்ரங்களில் மிகரஹஸ்ய மாய்க் கூறப்பட்டுள்ளதால் அது இங்கே கூறப்படுகின்றது.

**महाषोडश्युद्धारः -**

**मा - माया - स्मर - वाग्भवाश्च सपरा वेदादिबीजं ततो**
**हृल्लेखा स्मरमातृबीजसहिता कूटत्रयं तद्वत् ।**
**शक्तिर्वाग्भव - मार - माय - रमया युक्तं त्वदीयं मनुः**
**भाव्यं षोडशबीजराजसहितं श्रीराजराजेश्वरी ॥**

**மஹாஷோட³ஶ்யுத்³தா⁴ர꞉ -**

**மா - மாயா - ஸ்மர - வாக்³ப⁴வாஶ்ச ஸபரா வேதா³தி³பீ³ஜம் ததோ**
**ஹ்ருல்லேகா² ஸ்மரமாத்ருபீ³ஜஸஹிதா கூடத்ரயம் தத்³வத் ।**
**ஶக்திர்வாக்³ப⁴வ - மார - மாய - ரமயா யுக்தம் த்வதீ³யம் மனு꞉**
**பா⁴வ்யம் ஷோட³ஶபீ³ஜராஜஸஹிதம் ஸ்ரீராஜராஜேஶ்வரீ ॥**

**(உரை)**

| | | |
|---|---|---|
| **मा** **மா** | = | லக்ஷ்மீ, |
| **माया** **மாயா** | = | ஹ்ருல்லேகை, |
| **स्मर** **ஸ்மர** | = | மந்மதன், |
| **वाग्भव** வாக்³ப⁴வ | = | பாலாப்பிரதமபீஜம், |

| | | |
|---|---|---|
| **सपराः** ஸபரா: | = | பாஉலயின் அந்தியபீஜம், |
| **वेदादिबीजं** வேதா³தி³பீ³ஜம் | = | பிரணவம், |
| **स्मरमातृ** ஸ்மரமாத்ரு | = | லக்ஷ்மீ, |
| **कूटत्रयं** கூடத்ரயம் | = | பஞ்சதசி. |

கூடத்திரயங்கஉள மூன்றுகக் கணக்கிடின் பதினுறு பீஜங்களே ஏற்படுகின்றன வென்பதறியத்தக்கது.

மேலே கூறப்பட்ட எல்லாவித்தைகளும் **காயத்ரீ**ஸ்வரூபத்தைவிடப் பின்ன மானதன்று.

## காயத்ரீ மந்த்ரார்த்தம்.

உலகத்தில் மிகப்பிரஸித்தமாயுள்ள ஆண், பெண், நபும்ஸகமென்னும் லிங்க தர்மங்களற்ற ஸச்சிதாநந்தலக்ஷணமுடைய, ஸூர்யமண்டல அந்தர்க்கதமான எந்த பிரஹ்ம தேஜஸ்ஸானது நம்முடைய புத்திவருத்திகஉளப் பிரேரஉண செய்கின்றதோ, ஜகத்தின் சிருஷ்டியாதி தர்மங்கஉளயுடையதாயும், பிரகாச ஸ்வரூபமுடையதாயும், யாவராலும் ஸேவிக்கத்தக்க சிரேஷ்டமானதாயும், ஸகல நிகமாகமங்களில் மிகப் பிரஸித்தமாயுமுள்ள அந்தப் பிரஹ்ம தேஜஸ்ஸை தியானிக்கின்ரேம். ஸர்வ ஜகத்காரணமாகும் பிரக்ருதியைவிட வேருகவுள்ள பராசக்தி தனது ஸாயுஜ்யரூப மோக்ஷத்தை, அதாவது, பிரஹ்மாபரோக்ஷ ஞானத்தையருளி நம்மை ரக்ஷிக்கட்டும் - என்பது நான்கு பாதங்களோடு கூடிய காயத்ரியின் அர்த்தமாகும்.

**பாலாமந்த்ர தாத்பரியம்**:

**वाग्भववीजेन वेदचतुष्टयस्वरूपं, ब्रह्मविष्णुरुद्र महेश्वर- स्वरूपं, परा-पश्यन्ती मध्यमा- वैखरीरूपशब्दब्रह्मस्वरूपं प्रति- पादितम् ॥ १ ॥**

**कामराजबीजे ककारस्य ब्रह्मार्थः, ईकारस्य तेजःपुञ्जात्मक- चिच्छक्तिरर्थः, लकारस्य लाति गृह्णातीति व्युत्पत्त्या तद्विशिष्टमर्थः । अन्तर्यामिरूपेण प्रतिपादितो बिन्दुः शिवस्वरूप इत्यर्थः ॥ २ ॥**

**शक्तिवीजस्य स् औः इति छेदः । स् (सः) पूर्वोक्तस्वरू- पाभिन्नब्रह्मवस्तु ।**
**विसर्गोऽहंपदवाच्यो जीवः । औकारेण अभेदः प्रतिपादितः ।**
**अहं ब्रह्मास्मि ब्रह्मवाहमस्मि ॥ ३ ॥**

**வாக்³ப⁴வவீஜேன வேத³சதுஷ்டயஸ்வரூபம், ப்³ரஹ்மவிஷ்ணுருத்³ர மஹேஶ்வர- ஸ்வரூபம், பரா-பஶ்யந்தீ மத்⁴யமா-வைக²ரீரூபமப்³த³ப்³ ரஹ்மஸ்வரூபம் ப்ரதி- பாதி³தம் ॥ 1 ॥**

**காமராஜபீ³ஜே ககாரஸ்ய ப்³ரஹ்மார்த²:, ஈகாரஸ்ய தேஜ:புஞ்ஜாத்மக-சிச்ச²க்திரர்த² :, லகாரஸ்ய லாதி க்³ருஹ்ணாதீதி வ்யுத்பத்த்யா தத்³ விஶிஷ்டமர்த²: । அந்தர்யாமிரூபேண ப்ரதிபாதி³தோ பி³ந்து³: ஶிவஸ்வரூப இத்யர்த²: ॥ 2 ॥**

**ஶக்திவீஜஸ்ய ஸ் ஔ: இதி சே²த³: । ஸ் (ஸ:) பூர்வோக்தஸ்வரூ-பாபி⁴ன்னப்³ரஹ்மவஸ்து । விஸர்கோ³(அ)ஹம்பத³வாச்யோ ஜீவ: । ஔகாரேண அபே⁴த³: ப்ரதிபாதி³த: । அஹம் ப்³ரஹ்மாஸ்மி ப்³ரஹ்மவாஹமஸ்மி ॥ 3 ॥**

சப்தப் பிரமாணத்தின் லக்ஷஞ்ருத்தியால் அதாவது, ஜஹதஜஹல்லக்ஷணை யால் காரிய காரணோபாதிகளை நிரஸனம் செய்து "ஸோஹம்; அஹம் ஸ:" என்று அநுஸந்தானம் செய்வதே பாலாமந்த்ரார்த்தத்தின் ஸாரமாகும்.

**பஞ்சதசீ வித்தையின் தாத்பரியம்** - ஹே மஹாமாயையே! பிரஹ்மத்தில் கற்பிதமாய்த் தோன்றும் மாயாவ்ருத்திகளை நீக்கி, யகண்டாகார பிரஹ்ம வ்ருத்தி யை யுண்டாக்கிப்பின்னர், அவ்வகண்டாகாரவ்ருத்தியையும் நீக்கி, ஸஹஜ ஸ்திதி யில் நிலைபெறச் செய்வாயாக - என்பதாம்.

**மஹாஷோடசீ வித்தையின் தாத்பரியம்**: - ஏகமாயும் அத்விதீயமாயுமுள்ள ஆத்மாபின்ன பிரஹ்மமானது, அவ்யக்த, மஹத்தத்துவ, அஹங்கார, அர்த்தநாரீஶ் வரஸ்வ ரூபமாயும், பார்வதீபரமேஶ்வர, வாணீஹிரண்யகர்ப்ப, லக்ஷ்மீநாராயண மிதுனங்களாயும், அக்னீஷோமாத்மக பிரிதிவியாதி பாஞ்சபௌதிக ஸர்வப்பிரபஞ்ச மாகவும் விளங்குகின்றது. இங்ஙனம் அத்தியாரோபத்தால் நாஞுவாய்த்தோன்றும் போதவிருத்திகளை நீக்கி, ஹே மாயாதீத பரதேவதையே! அகண்டாகாரவ்ருத்தியை யருளி ஜீவன் முக்த ஸஹஜஸ்திதியில் நிறுத்துவாயாக - வென்பதாகும்.

**காமகலை - ஏகாக்ஷரீ மந்த்ரதாத்பரியம்: -**

**स्+र्+ई+म् ஸ்+ர்+ஈ+ம் =** என்னும் நான்கு பீஜங்கள் இவை முறையே, பிரகாச, விமர்ச, மிஶ்ர, ஸம்வித்பிந்துக்களென்றும், ஆத்மதத்துவ, வித்யாதத்துவ, சிவ தத்துவ, துரீயதத்துவஸ்வரூபமென்றும், ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண, சித் சரீரங்க ளென்றும், ஜாக்கிர, ஸ்வப்ன, ஸுஷுப்தி, துரீயா வஸ்தைகளென்றும், விஶ்வ, தைஜஸ, பிராக்ஞ கூடஸ்தர் களென்றும் பொருள்படும் - என்று சாஸ்திரங்கள் பறை சாற்றுகின்றன.

**புவனேஸ்வரி- ஏகாக்ஷரீ மந்த்ர தாத்பர்யம்: -**

**ह्+र्+ई+म् ஹ்+ர்+ஈ+ம்** = என்னும் நான்கு பீஜங்கள். இதற்கும் மேலே காம கலைக்குக் கூறியபடியே அர்த்தம் செய்யப்பட்டுள்ளது. அன்றியும் இந்த மந்த்ரத்திற்கு ஷோடச கலாத்மகஸ்வரூபம் கூறப்பட்டுள்ளது.

**ह ஹ** = 8. **र ர** = 2. **ई ஈ** = 4. பிந்து 1. ஆக 15 கலைகள் வியஷ்டியிலும், ஸமஷ்டியாய் ஒன்றுங்கூடி பதினாறு கலைகள் கணக்கிடப்பட்டுள்ளன.

அன்றியும், இந்த புவனேஶ்வரீமந்த்ரமானது மஹாவாக்கிய ஸ்வரூபமாயும் இருக்கின்றது. **ह् ஹ்** = தத்பதம்; **र् ர்** = துவம்பதம். **ईम् ஈம்** = அஸிபதம்.

**நவாக்ஷரீ மந்த்ர தாத்பர்யம்: -**

**निर्धूतनिखिलध्वान्ते नित्यमुक्ते परात्परे ।**
**अखण्डब्रह्मविद्यायै चित्सदानन्दरूपिणीम् ॥**

**நிர்தூ4தநிகி2லத்4வாந்தே நித்யமுக்தே பராத்பரே ।**
**அக2ண்ட3ப்3ரஹ்மவித்3யாயை சித்ஸதா3னந்த3ரூபிணீம் ॥**

**अनुसंदध्महे नित्यं वयं त्वां हृदयाम्बुजे ।**
**इत्थं विशदयत्येषा या कल्याणी नवाक्षरी ॥**

**அனுஸந்த3த்4மஹே நித்யம் வயம் த்வாம் ஹ்ருத3யாம்பு3ஜே ।**
**இத்த2ம் விஶத3யத்யேஷா யா கல்யாணீ நவாக்ஷரீ ॥**

**தாத்பரியம்**: - காரியகாரண அக்ஞானங்களை யொழித்த ஞானஸ்வரூபிணியே! எப்பொழுதும் அக்ஞான ஸம்பந்தம் அற்பமுமின்றி விடுபட்டுள்ளவளே!! எல்லாவற் றுள்ளும் பரம சிரேஷ்டமாய் யாவராலும் மதிக்கப்படும் பிரஹ்மாநந்த ஸ்வரூபியே!!! காலதேசவஸ்து பரிச்சேதமற்ற ஜீவப்பிரஹ்மைக்கியஸ்வரூப பிரஹ்மவித்தையின் பொருட்டு நான் உம்மை அநுஸந்தானம் செய்கின்றேன். இங்ஙனம், நவாக்ஷரீ மந்த்ராதிஷ்டான ஸ்வரூபமாயும், மோக்ஷப்ரதையாயுமுள்ள **சண்டீவித்தை**யின் அர்த்தம் சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளதறியத்தக்கது.

மேற்கூறியவித்யைகள் யாவும் ஆத்மாபரோக்ஷஞான ஸாதனங்களாயிருத்த லின், பிரஹ்மவித்தைக்குத் திணையளவும் வேறுபடாத ஸ்ரீவித்தையில் சேர்க்கப்பட்டு ள்ளனவென்று அறிதல் வேண்டும்.

எங்ஙனம் பிரணவமானது பரமேஶ்வரனுக்கு வாசகமோ, அங்ஙனமே மேற் கூறியனவும், பிறவுமான வித்தைகள் பிரஹ்மாபின்ன சித்சக்தியின் வாசகங்களாம். பரதேவதைக்கு வித்யாத்மகத்துவம் வாச்யார்த்தத்தினாலும், அதிஷ்டானத்துவம் லக்ஷ்யார்த்தத்தினாலும் சித்திக்கின்றன.

சப்தாத்மகவித்தைக்கும், வித்யாதிஷ்டான தேவதைக்கும் அபேதம் கூறிய காரணத்தால் அர்த்தாத்மக பிரபஞ்சத்திற்கும், பிரபஞ்சாதிஷ்டான பரதேவதைக்கும் அபேதம் சித்திக்கின்றது. இங்ஙனம் அண்டபிண்டவடிவ பிரபஞ்சத்திற்கும், தேவதைக்கும், வித்தைக்கும் யாதொரு பேதமுமில்லையென்று ஸந்தேஹவிபரீதங்களறத் திடமாய் அறிந்து தெளிந்த பாக்கியவானுக்குத் துக்கமென்பது ஒரு சிறிதும் கிடையாதென்பது சிதையாத ஸித்தாந்தமாகும்.

அத்தகைய, மஹானுபாவனுக்கு இவ்வுலகம் பரமாநந்தமயமாய் விளங்கும். அபேததரிசனமே ஆநந்த அபிவியஞ்ஜகமாகும்.

**ஸ்ரீகாமகலா விலாஸம்**
**வித்யா பாதம்**
**முற்றிற்று.**

---

# ஸ்ரீ காமகலா விலாஸம்.

## ஆநந்தோல்லாஸம்

### ஆநந்தபாதம்.

(**அவதாரிகை**) முன் வித்யாபாதத்தில் அபேதம் ஸித்தாந்தம் செய்யப்பட்டது. அபேத தர்சனத்தின் மஹாபலன் அபயரூப ஆநந்தமே யாதலின் வித்யாபாதத்திற்குப் பின்னர் ஆநந்தபாதம் வைக்கப்பட்டுள்ளது அறியத்தக்கது. இந்த பாதத்தில் ஸ்ரீசக்கிரத் தின் நிரூபணம் செய்யப்படுகின்றது. ஸ்ரீசக்கிரத்திற்கும் ஆநந்தத்திற்கும் என்ன ஸம்ப ந்தமென்று யாவருக்கும் சங்கையுண்டாகலாம். அதற்கு ஸமாதானம் கூறப்படுகின் றது.

**आनन्दं ब्रह्मणो रूपं तच्च देहे व्यवस्थितम् ।**
**तस्याभिव्यञ्जको देहो रक्षणीयो महामुने ॥**

**ஆனந்த$^{3}$ம் ப்$^{3}$ரஹ்மணோ ரூபம் தச்ச தே$^{3}$ஹே வ்யவஸ்தி$^{2}$தம் ।**
**தஸ்யாபி$^{4}$வ்யஞ்ஜகோ தே$^{3}$ஹோ ரக்ஷணீயோ மஹாமுனே ॥**

என்று திரிபுரார்ணவம், சர்யாபாதம் கூறுவதால் சரீரமே ஆநந்தஸ்வரூப சிவத்தின் அபிவியஞ்ஜகமென்றேற்படுகின்றது.

ஸ்ரீசக்கிரத்தைச் சிவசக்திகளின் சரீரமாகச் சாஸ்திரங் கூறுவதால் ஆநந்தாநு பவத்தின் ஆயதனமாகும். சிவசக்திகளின் சரீரவடிவ ஸ்ரீசக்கிரம் இந்த பாதத்தில் விமர்சிக்கப்படுவது நியாயமே யாகும். மேலும் இந்த ஸ்ரீசக்கிரத்திற்கும், பிண்டமா கும் ஜீவர்களின் சரீரத்திற்கும், பிரபஞ்சமாகும் அண்டத்திற்கும் அபேதம் சாஸ்திரம் பிரதி பாதிக்கின்றது.

சிவாபின்ன ஆத்மாநந்தம் சுத்தஸத்துவப்பிரதான அந்தக்கரணத்தில் அகண்டா காரவ்ருத்தியால் அநுபவிக்கப்படுவதாதலின் அந்தக்கரணமே **ஸ்ரீசக்கிர**மென்பது பரம ரஹஸ்யமாகும். பரதேவதையே **ஸ்ரீசக்கிர**வடிவமாய் விளங்குகின்றனள்.

### சக்கிர ஸங்கேதம்.

**यासान्तरोहरूपा परा महेशी त्रिभाविता सैव ।**
**स्पष्टा पश्यन्त्यादित्रिमातृकात्मा च चक्रतां याता ॥ २० ॥**

**யாஸாந்தரோஹரூபா பரா மஹேஶீ த்ரிபா$^{4}$விதா ஸைவ ।**
**ஸ்பஷ்டா பஶ்யந்த்யாதி$^{3}$த்ரிமாத்ருகாத்மா ச சக்ரதாம் யாதா ॥ 20 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **या**<br>**யா** | = | எந்த பரதேவதை, |
| **असान्तरोहरूपा**<br>**அஸாந்தரோஹரூபா** | = | அந்தக்கரணவிருத்தியால் இத்தகைய ஸ்வரூபமுடையவளன்று அளவிட்டுக் கூற முடியாதவளும், ஆதலின் மனோவாக்குக்களுக்கு அதீதையானவளும், சிவாதி தரணி யீறுகவுள்ள முப்பத்தாறு தத்துவங்களும் தோன்றுதற்குரிய பரமகாரண பூமியாகவுமுள்ள, |
| **परा महेशी**<br>**பரா மஹேஶீ** | = | ஸர்வவியாபியாயும் ஸர்வநியந்தாவாயுமுள்ள பராசக்தியாய் விளங்குகின்றனளோ, |
| **सैव**<br>**ஸைவ** | = | அவளே, |
| **त्रिभाविता**<br>**த்ரிபா⁴விதா** | = | மூன்று விதமாய் ஆவிர்ப்பவித்தவளாய், |
| **स्पष्टा**<br>**ஸ்பஷ்டா** | = | விளக்கமான, |
| **पश्यन्त्यादित्रिमातृकात्मा**<br>**பஶ்யந்த்யாதி³த்ரிமாத்ருகாத்மா** | = | பஶ்யந்தீ, மத்தியமை, வைகரி என்று கூறப்படும் மூன்று மாத்ருகா வடிவத்தோடுள்ளவளாய், |
| **चक्रतां याता**<br>**சக்ரதாம் யாதா** | = | ஸ்ரீசக்கிரரூபத்தை அடைந்தனள். |

பராவாக்ஸ்வரூப சித்சக்தியே பஶ்யந்தீ, மத்தியமை, வைகரீ என்னும் மூன்று வாக்குகளின் வடிவ ஸ்ரீசக்கிர ரூபத்தை யடைந்தனள். இந்த ஶ்லோகத்தினுல் பரா, பஶ்யந்தீ முதலிய நான்கு வாக்குக்களே ஸ்ரீசக்கிரவடிவமாயினவென்னும் தத்துவமும் வெளியாகின்றது.

**चत्वारि वाक्परिमिता पदानि तानि विदुर्ब्राह्मणा ये मनीषिणः**
**त्रीणि गुहानिहितानीङ्गयन्ति तुरीयं वाचो मनुष्या वदन्ति ॥**

**சத்வாரி வாக்பரிமிதா பதா³னி தானி விது³ர்ப்³ராஹ்மணா யே மனீஷிணঃ**
**த்ரீணி கு³ஹாநிஹிதானீங்க³யந்தி துரீயம் வாசோ மனுஷ்யா வத³ந்தி ॥**

**(தாத்பர்யம்)** பிரஸித்தமாயுள்ள பரா, பஶ்யந்தீ, மத்தியமை, வைகரியென்னும் நான்குவித வாக்குகளின் ஸ்தானங்களை எந்த ஸாதக முமுக்ஷுக்கள் அறிகின்றுர்களோ அவர்களே மநீஷையோடு கூடியவர்கள் அதாவது வித்துவான்களாவர். அவற்றுள் பரா, பஶ்யந்தீ, மத்தியமை யென்னும் மூன்றுவாக்குகளும் பராநாடியென்னும் குஹைக்குள் இருப்பதால் பாமரர்கள் அறியமாட்டார்கள். ஆயினும் மந்தமதியினராகிய மனுஷ்யர்கள் நான்காவதான வைகரீ வடிவத்தை நாவினுல் உச்சரிக்கின்றுர்கள்.

துரீயபாதத்தில் பிரகாசவடிவ சுத்தப் பிரஹ்மத்தின் அஹந்தா விமர்சமே பராசக்தியென்று கூறப்பட்டுள்ளது. ஆதலின் பரையின் வடிவம் **अणुतररूपानुत्तरविमर्शलिपिलक्ष्य அணுதரரூபானுத்தரவிமர்ஶலிபிலக்ஷ்ய** மேயாகும்; என்றல் **अ-हं அ-ஹம்** என்னும் இரண்டு அக்ஷரங்களின் லக்ஷ்யார்த்தவடிவினளே பரையென்றேற்படுகின்றது. **अ** முதல், **ह** வரையிலுள்ள நாற்பத்தொன்பது எழுத்துக்களே மாத்ருகைகளாமென்பது சித்தாந்த பக்ஷமாகும். இந்த ஸ்தூலமாத்ருகைகளே வைகரீவாக்காகும். வைகரீ வாக்கிற்குக் காரணம் மத்தியமை; அதற்குக் காரணம் பஶ்யந்தி; அதற்குக் காரணம் பரா. **இந்த பரா ஸ்வரூபம் மஹாப்பிரகாச பிரஹ்மத்தின் அஹந்தாரூப விமர்ச்சக்தியே யாகும்**.

காணப்படும் இந்த பிரபஞ்சமானது ஸத் - அஸத். என்னும் இரண்டு பகுதிகளோடுகூடி விளங்குகின்றது. ஸத் = பிரஹ்மம். அஸத்து = மாயை.

**अस्ति भाति प्रियं रूपं नाम चेत्यंशपञ्चकम् ।**
**आद्यत्रयं ब्रह्मरूपमन्त्यं मायिकमेव च ॥**

**அஸ்தி பா⁴தி ப்ரியம் ரூபம் நாம சேத்யம்ஶபஞ்சகம் ।**
**ஆத்³யத்ரயம் ப்³ரஹ்மரூபமந்த்யம் மாயிகமேவ ச ॥**

மாயிகமாயுள்ள நாமரூப பாகங்களிலும் சிவசக்தியம்சங்களுள. நாமம் சக்தியம்சமும், ரூபம் சிவாம்சமுமாகும். ஸர்வஜகத் சிருஷ்டிக்கு ஆதிகாரணம் நாமாத்மக சப்தந்தான் என்று அவித்யாபாதத்தில் நன்கு பிரதிபாதிக்கப்பட்டுள்ளது. ஆகவே சப்தப்பிரஹ்மவடிவ சிற்சக்தியினின்றும் ஜோதிஸ்வரூபம் பிந்து ஒன்று தோன்றிற்று. இந்த பிந்துவினின்று பீஜமும், நாதமுமுண்டாயின. இந்த பீஜ, நாதங்களின் ஸமஷ்டிஸ்வரூபமே பராவாக்கெனப்படும். இந்த பராவாக்கு மூலாதாரத்தில் தோன்றிப் பொன் போல் விளங்கும். இந்த பரை பிராணவாயுவோடு கலந்து நாபிஸ்தானத்தை யடைந்தபோது முன்னிலும் அதிக பிரகாசமுள்ளதாய் விளங்கும். இதற்குத் தான் பஶ்யந்தீ யென்றுபெயர். பின்னர், இது ஸுஷும்நா மார்க்கமாய் ஹ்ருதயத்தை யடையும். அப்பொழுது இது **மத்தியமை**யென்னும் பெயர் பெறும். மத்தியமையென்னும் இந்தவாக்கு பிரஹ்மரந்த்ரத்தை யடைந்து அக்ஷர ஸ்வரூபமாய் விளங்கும். இதற்கு **வைகரீ** வாக்கென்று பெயர். இங்ஙனம் ஸூதஸம்ஹிதை யக்ஞவைபவ கண்டம் நான்காவது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. அன்றியும்,

**शिवः शक्त्या समागमात् ।**
**शिवेच्छैव च सर्वेषामुत्पत्त्यर्थमनन्तरम् ॥**
**तदभूत्क्षोभितं विश्वकारणं योगमायया ।**
**तत्क्षोभतः समुत्पन्नं शास्त्रं नादस्वरूपतः ॥**
**प्रवृत्तं तदधः किंचिद्विकुब्जाकारतः शिवम् ।**
**स बिन्दुरिति विख्यातः शरच्चन्द्रसमप्रभः ॥**

**ஶிவ: ஶக்த்யா ஸமாக3மாத் ।**
**ஶிவேச்சை2வ ச ஸர்வேஷாமுத்பத்த்யர்த2மனந்தரம் ॥**
**தத3பூ4த்க்ஷோபி4தம் விஶ்வகாரணம் யோக3மாயயா ।**
**தத்க்ஷோப4த: ஸமுத்பன்னம் ஶாஸ்த்ரம் நாத3ஸ்வரூபத: ॥**
**ப்ரவ்ருத்தம் தத3த4: கிஞ்சித்3விகுப்3ஜாகாரத: ஶிவம் ।**
**ஸ பி3ந்து3ரிதி விக்2யாத: ஶரச்சந்த்3ரஸமப்ரப4: ॥**

சிருஷ்டிகாலத்தில் சிவன் சக்தியோடு பொருந்துதலால் சிவேச்சையிஞலேயே விஶ்வோத்பத்தியின் பொருட்டு யோகமாயையினால் ஜகத்காரணமாகும் அது கலக்கப்பட்டது. அக்கலக்கத்தால் நாதஸ்வரூபமாக சாஸ்திர முண்டாயிற்று. அந்நாதத்தின் கீழ்ப்பாகத்தில் சற்று வஊந்த வடிவமாகப் பிரவர்த்தித்தது சிவம். சரத்கால சந்திரஊைப்போன்ற பிரகாசமுடைய அது பிந்துவென்னும் பெயர் பெற்றது. (பௌஷ்கரம்)

**मूलाधारगता शक्तिः स्वाधारा बिन्दुरूपिणी ।**
**तस्मादुत्पद्यते नादः सूक्ष्मवीजादिवाकरः ॥**

**तां पश्यन्तीं विदुर्विश्वं यया पश्यन्ति योगिनः ।**
**हृदये व्यज्यते घोषो गर्जत्पर्जन्यसंनिभः ॥**

**तत्र स्थिता सुरेशान मध्यमेत्यभिधीयते ।**
**प्राणन च स्वराख्येन प्रथिता वैखरी पुनः ॥**

**शाखापल्लवरूपेण ताल्वादिस्थानघट्टनात् ।**
**अकारादिक्षकारान्तान्यक्षराणि समीरयेत् ॥**

**மூலாதா4ரக3தா ஶக்தி: ஸ்வாதா4ரா பி3ந்து3ரூபிணீ ।**
**தஸ்மாது3த்பத்3யதே நாத3: ஸூக்ஷ்மவீஜாதி3வாகர: ॥**

**தாம் பஶ்யந்தீம் விது3ர்விஶ்வம் யயா பஶ்யந்தி யோகி3ன: ।**
**ஹ்ருத3யே வ்யஜ்யதே கோ4ஷோ க3ர்ஜத்பர்ஜன்யஸம்நிப4: ॥**

**தத்ர ஸ்தி2தா ஸுரேஶான மத்4யமேத்யபி4தீ4யதே ।**
**ப்ராணன ச ஸ்வராக்2யேன ப்ரதி2தா வைக2ரீ புன: ॥**

**ஶாகா2பல்லவரூபேண தால்வாதி3ஸ்தா2னக4ட்டனாத் ।**
**அகாராதி3க்ஷகாராந்தான்யக்ஷராணி ஸமீரயேத் ॥**

மூலாதாரத்திலுள்ள சக்தியானது ஸ்வாதாரமான பிந்துவடிவினதாம். அதனின்றும், வித்தினின்று முஊயுண்டாவதுபோல, நாதமுண்டாயிற்று; ஸர்வக்ஞரான யோகிகளுக்கு அது விளங்கும் காரணத்தால் அதற்கு பஶ்யந்தீயென்னும்

பெயரேற்பட்டது. ஹ்ருதயத்தில் மேகத்தின் கர்ஜனைபோல் ஒருகோஷம் வெளிப்படு கின்றது. இதற்கு மத்யமையென்று பெயர். இந்த மத்தியமை, பின்னர் பிராணனோடும், ஸ்வரத்தோடும் சேர்ந்து வைகரீயெனப்படுகின்றது. அண்ணம், நாக்கு முதலிய ஸ்தானங்களில் மோதுதலால் அகாராதி அக்ஷரங்கள் ஸ்புடமாகின்றன.

(யோக சிகோபநிஷத்)

இதன் ரஹஸ்யார்த்தம் கூறப்படுகின்றது: -

பிரஹ்மாண்டம், பிண்டாண்டம், மாத்ருகைகள் முதலியன சிவசக்தியாத்மக ங்கள். ஸாதகர்களின் சிரஸில் பிரஹ்மரந்த்ரத்தின் கீழ் ஸஹஸ்ராரகமல மிருக்கின் றது. இதுதான் சித்சந்திரமண்டலம் -- பரசிவஸ்தானம். ஸர்வ காரண **ஸம்வித்பிந்து**. இந்த ஸஹஸ்ராரத்திலிருந்து மூலாதாரம் வரை ஸுஷும்நை யென்னும் பராநாடி வியாபித்திருக்கின்றது. இது சக்திஸ்வரூபம். மேலுள்ள சித்சந்திரமண்டலத்தின் தேஜஸ்ஸானது இந்த நாடியின் மூலமாயப்பிரஸரித்து, மத்தியிலுள்ள ஷட்கமலங்க ளையும் பிரகாசிப்பிக்கச் செய்கின்றது. இதற்கு பிரஹ்மதண்டமென்றும் மற்றொரு பெயருண்டு. ஆகவே பிரஹ்மசக்தியாகும் ஸரஸ்வதி, அகாராதி க்ஷகாராந்தமான ஐம்பது மாத்ருகைகளாக விசுத்தி முதலிய கமலங்களில் விளங்குகின்றனள். விசுத்தி முதலிய ஆறு கமலங்களில் விளங்குவன வைகரீ வாக்கேயாகும். இது ஸ்தூலம். **வாக்ரூபிணியாகும் சித்சக்தியானவள் மூலாதாரத்தில் பிந்துவடிவங்கொண்டு பரை யாகவும், நாபிஸ்தானத்தில் நாதவடிவங்கொண்டு பஶ்யந்தி யாகவும், ஹ்ருதயத்தில் துவனி வடிவங்கொண்டு மத்தியமை யாகவும், முகத்தில் அக்ஷரவடிவங்கொண்டு வைகரீயாகவும் விளங்குகின்றனளென்றறியவும்**.

எங்ஙனம், சரீரத்திலுள்ள மூலாதாராதி சக்கிரங்கள் பஶ்யந்தீ முதலிய மூன்றுவித மாத்ருகைகளின் வடிவமோ அங்ஙனமே, ஸ்ரீசக்கிரமும் மூன்றுவித மாத்ருகைகளின் வடிவமேயாகும். ஆதலின் சரீரத்திற்கும் ஸ்ரீசக்கிரத்திற்கும் அபேதம் கூறப்பட்டதாகும். **(20)**

**(அவதாரிகை)** ஸ்ரீசக்கிரத்திற்கும் பரதேவதைக்கும் அபேதம் கூறப்படுகின்றது.

## चक्रस्यापि महेश्या न भेदलेशोऽपि भाव्यते विबुधैः ।
## अनयोः सूक्ष्माकारा परैव सा स्थूलयोश्च कापि भिदा ॥ २१ ॥

**சக்ரஸ்யாபி மஹேஶ்யா ந பே⁴த³லேஶோ(அ)பி பா⁴வ்யதே விபு³தை⁴: ।**
**அனயோ: ஸூக்ஷ்மாகாரா பரைவ ஸா ஸ்தூ²லயோஶ்ச காபி பி⁴தா³ ॥ 21 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **महेश्या** மஹேஶ்யா | = | திரிபுரஸுந்தரீ தேவிக்கும், |
| **चक्रस्यापि** சக்ரஸ்யாபி | = | ஸ்ரீசக்கிரத்திற்குங் கூட, |

| | | |
|---|---|---|
| **भेदलेशोऽपि**<br>**பே⁴த³லேஶோ(அ)பி** | = | அணுவளவு பேதமும், |
| **विबुधैः**<br>**விபு³தை⁴꞉** | = | பண்டிதர்களால், |
| **न भाव्यते**<br>**ந பா⁴வ்யதே** | = | பாவிக்கப்படுவதில்லை, |
| **अनयोः**<br>**அனயோ꞉** | = | சக்கிரம், தேவதை இவர்களின், |
| **सूक्ष्माकारः**<br>**ஸூக்ஷ்மாகார꞉** | = | அபரிச்சேத்யமான ஸ்வரூபமானது, |
| **सा परैव**<br>**ஸா பரைவ** | = | அந்த பராசக்தியேயாகும், |
| **स्थूलयोः**<br>**ஸ்தூ²லயோ꞉** | = | ஸ்தூலரூப திரிகோணுதி பூபுராந்தசக்கிரவடிவமாயும், அவற்றின் ஈஶ்வரிகளாயும் அந்த பராசக்தியே விளங்குவதால் ஸூக்ஷ்மமாயுள்ளபிந்து - பராசக்திகளுக்கும், ஸ்தூலமாயுள்ள இதரசக்கிர சக்கிரேஶ்வரிகளுக்கும், கொஞ்சங்கூட பேதமில்லை. |

**(விரிவுரை)** முன்னர் பத்தொன்பதாவது ஶ்லோகத்தில் வித்யைக்கும் தேவதைக்கும் அபேதங் கூறப்பட்டது. பின்னர் இருபதாவது ஶ்லோகத்தில் அந்த வித்யா பின்ன தேவதையே பராவாக் ஸ்வரூபமாய் இருக்கின்றனளென்றும், அவளே ஸூக்ஷ்மமாயும், ஸ்தூலமாயுமுள்ள ஸ்ரீசக்கிராகாரம் எய்தினளென்றும் கூறப்பட்டது.

பராசக்தியின் ஸூக்ஷ்மரூபம் பராவாக்வடிவம். இது தேஜோபிந்து வடிவினது,

பராசக்தியின் ஸ்தூலரூபம் - ஐம்பத்தோரெழுத்துக்கள் வடிவ வைகரீவாக்கு. பயந்தீயும், மத்திமையுங்கூட பராவாக்கை நோக்க ஸ்தூலமே யாகும்.

இந்த ஸ்லோகத்தில் பராவாக்கிற்கும் ஸ்ரீசக்கிரத்திற்கும் அபேதம் கூறப்பட்டுள்ளது.

ஸ்ரீசக்கிரத்தின் ஸூக்ஷ்மரூபம் பிந்து; ஸ்தூலரூபம் திரிகோணம், அஷ்டகோணம், அந்தர்த்தசாரம், பஹிர்த்தசாரம், மன்வரம், அஷ்டதள -ஷோடசதள கமலங்கள், திரிவலயங்கள், பூபுரத்திரயம்; இவை முறையே முன்னதைவிட பிந்தியது ஸ்தூலமாகும். பூபுரம் அதிக ஸ்தூலமாம். பிந்துசக்கிரேஶ்வரியாகும் பரையே ஸூக்ஷ்மமானது. திரிகோணம் முதலிய சக்கிரேஶ்வரிகள் ஸ்தூல ரூபமானவர்கள்.

**सेयं परा महेशी चक्राकारेण परिणमेत यदा ।**

**ஸேயம் பரா மஹேஶீ சக்ராகாரேண பரிணமேத யதா$^{3}$ ।**

என்னும் வாமகேஶ்வரதந்த்ர பிரமாணத்தின்படியும் சக்கிரதேவதைகளுக்கு அபேதமே ஸித்திக்கின்றது. **(21)**

**(அவதாரிகை)** இனி பராசக்தியின் பரிணுமமாகும் நவயோனிவடிவ ஸ்ரீ சக்கிரத்தை விமர்சிக்கத்தொடங்கி முதலில் ஸர்வாநந்தமயமென்னும் பெயரையுடைய பிந்துசக்கிரத்தை வர்ணிக்கின்ருர்.

## பிந்துமண்டல நிரூபணம்.

**मध्यं चक्रस्य स्यात् परामयं विन्दुतत्वमेवेदम् ।**
**उच्छूनं तच्च यदा त्रिकोणरूपेण परिणतं स्पष्टम् ॥ २२ ॥**

**மத்$^{4}$யம் சக்ரஸ்ய ஸ்யாத் பராமயம் விந்து$^{3}$தத்வமேவேத$^{3}$ம் ।**
**உச்சூ$^{2}$னம் தச்ச யதா$^{3}$ த்ரிகோணரூபேண பரிணதம் ஸ்பஷ்டம் ॥ 22 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **चक्रस्य** **சக்ரஸ்ய** | = | ஸ்ரீசக்கிரத்தினுடைய, |
| **मध्यं** **மத்$^{4}$யம்** | = | மத்தியிலுள்ள, |
| **इदं विन्दुतत्वं** **இத$^{3}$ம் விந்து$^{3}$தத்வம்** | = | ஸ்வஸாக்ஷாத்காரஸ்தானமாகிய பிந்துவினுடைய யதார்த்தஸ்வரூபமானது, |
| **परामयमेव** **பராமயமேவ** | = | பரையென்னும் சித்சக்தியின் வடிவமேயாகும், |
| **तच्च** **தச்ச** | = | அந்த பைந்தவஸ்தானமும், |
| **यदा** **யதா$^{3}$** | = | எப்பொழுது, |
| **उच्छूनं भवति** **உச்சூ$^{2}$னம் ப$^{4}$வதி** | = | விகாஸபாவத்தை யடைகின்றதோ, |
| **तदा** **ததா$^{3}$** | = | அப்பொழுது, |
| **स्पष्टम् त्रिकोणरूपेण** **ஸ்பஷ்டம் த்ரிகோணரூபேண** | = | ஸ்பஷ்டமாக ஸ்தூலத்ரிகோணவடிவமாய், |

| | | |
|---|---|---|
| **परिणतं** <br> **பரிணதம்** | = | பரிணமித்ததாய், |
| **भवति** <br> **ப4வதி** | = | ஆகின்றது. |

**(விரிவுரை)** ஸ்ரீசக்கிரத்திலுள்ள பிந்து பராஸ்வரூபமே. இது ஸ்ரீசக்கிரத்திலுள்ள ஒன்பது சக்கிரங்களுக்கும், பஶ்யந்தீ, மத்தியமை, வைகரீயென்னும் மாத்ருகைக ளுக்கும் காரணமாய் இருக்கின்றது.

**त्रिमातृकात्मा च चक्रर्ता याता**

**த்ரிமாத்ருகாத்மா ச சக்ரர்தா யாதா**

என்று கூறப்பட்டுள்ளதனால் பஶ்யந்தீ முதலிய மூன்றுமாத்ருகைகளே திரிகோணம் முதலிய சக்கிரவடிவங்களாய்ப் பரிணமித்தனவென்றேற்படுகின்றது. ஆதலின் மாத்ருகைகளின் உத்பத்தியையும், அதன் மூலமாய் சக்கிரங்களின் உத்பத்தியையுங் கூறுதல் பொருத்தமுடையதாகும். பிந்துஸ்தானமானது மாத்ருகைக்கும், சக்கிரத்திற் கும் பிரதம காரணமாயிருக்கின்றது. பிந்துவிலிருந்து பஶ்யந்தியாதி மூன்று மாத்ரு கைகளும் தோன்றிற்று; அங்ஙனமே அதிலிருந்து திரிகோணுதி ஒன்பது சக்கிரங்கள் தோன்றின. ஆதலின் மாத்ருகையும், சக்கிரமும் முறையே, நாமரூபங்களாயிருக்கி ன்றன. இந்த பிந்து விகாஸபாவத்தை யடையுங்கால் தேஜோமயமான திரிகோண மண்டலம் உண்டாகின்றது. பின்னர், கிரமக்கிரமமாய் அஷ்டகோணம் முதலிய சக்கி ரங்களுண்டாகின்றன. **(22)**

## யோநிசக்கிர நிரூபணம்.

**एतत्पश्यन्त्यादि- त्रितयनिदानं त्रिबीजरूपं च ।**
**वामा ज्येष्ठा रौद्री चाम्बिकयानुत्तरांशभूताः स्युः ॥ २३ ॥**

**ஏதத்பஶ்யந்த்யாதி3- த்ரிதயநிதா3னம் த்ரிபீ3ஜரூபம் ச ।**
**வாமா ஜ்யேஷ்டா2 ரௌத்3ரீ சாம்பி3கயானுத்தராம்ஶபூ4தாஃ ஸ்யுஃ ॥ 23 ॥**

**(பதவுரை)**

| | | |
|---|---|---|
| **एतत्** <br> **ஏதத்** | = | மத்திய பிந்துவின் விகாஸரூபமான இந்த திரிகோணசக்கிரமானது, |
| **पश्यन्त्यादि- त्रितयनिदानं** <br> பஶ்யந்த்யாதி3- த்ரிதயநிதா3னம் | = | பஶ்யந்தீ, மத்தியமை, வைகரீயென்னும் மூன்று மாத்ருகைகளின் ஆவிர்ப்பாவ காரணமாயும், |
| **त्रिबीजरूपं च** <br> **த்ரிபீ3ஜரூபம் ச** | = | வாக்பவ, காமராஜ, சக்திபீஜஸ்வரூபமாயும் இருக்கின்றது, |

